# MIXTURE

## IN TAMIL

BY

RAO BAHADUR P. SAMBANDAM, B.A., B.L.,

*Author of:*

The Two Sisters, Galava, The Eye of Love, The Curse of Urvasi, The Merchant of Vanipura, Fate and Love, Simhalanatha, Pushpavalli, Amaladitya, Magapathi, The Ideal Wife, Siruthondar, The Golden Fetters, True Love, The Bandit Chief, Bricks-Between, At Any Cost, The Fair Ghost, The Wedding of Valli, Brahmin *vs* Non-Brahmin, Vijayarangam, As you like it, Sati Sulochana, Lord Buddha, The Tragedy of Silence, The Good Fairy, Geetha Manjari, The True Brother, Malävikagnimitra, Chandrahari, The Demon Land, Sabapathy Part I, The Pongal Feast or Sabapathy Part II, A Rehearsal or Sabapathy Part III, Sabapathy Part IV, Blessed in a Wife, The Dancing Girl, Subadra-Arjuna, Karna the Giver, Sahadeva's Stratagem, The Surgeon General's Prescription, Vichu's Wife, Sakuntala, Vikramorvasi, The Point of View, The Two Selves, The Tragic Denouement, The Sub-Assistant Magistrate of Sultanpet, Harischandra, Blind Ambition, Markandeya, Sarangadhara, Manohara, The Two Friends, The Knavery of Kalappa, As We Sow-So We Reap, Over Forty Years Before the Footlights Parts I, II, III, IV, V & VI, The Search, Prince Koneri, The Crowd in the Shandy, Ratnavali, The Gypsy Girl, Vaikunta Vaithiyar, Dikshithar Stories, Funny Stories, The Good Sister, Short Stories, Hints to Actors, The Tamil Drama, Humorous Essays, A Hand Book for Tamil Talkies, Stray Flowers, Talkie Experiences etc. in Tamil; and Harischandra, and Yayathi in English.

FIRST EDITION

Madras:

PRINTED BY THE PEERLESS PRESS,

15, LINGHI CHETTY STREET, G. T.

 1938 Price per Copy

# கதம்பம்

ராவ் பஹதூர்

**ப. சம்பந்த முதலியார், பி. ஏ., பி. எல்.,**

அவர்களால் தமிழில் இயற்றப்பட்டது.

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ் நூல்கள்:—

லீலாவதி-சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனா, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், வள்ளிமணம், பேயல்ல பெண் மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அசிஸ்டெண்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள் முதற்பாகம், இரண்டாம் பாகம், மூன்றாம் பாகம், நான்காம் பாகம், ஐந்தாம் பாகம், ஆறாம் பாகம், நாடகத் தமிழ், யயாதி, பிராம்மணனும் சூத்திரனும், வாணீபுர வணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, கண்டு பிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சிபெறுவ தெப்படி?, ஹாஸ்ய வியாசங்கள், தமிழ் பேசும் படக்காட்சி, விடுதிப்புஷ்பங்கள், பேசும்பட அனுபவங்கள், முதலியன.

முதற் பதிப்பு

சென்னை 'பியர்லெஸ்' அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

1938 [விலை 2-00

INSCRIBED

TO

THE BELOVED MEMORY

OF

MY PARENTS

P. VIJIARANGA MUDALIAR

AND

P. MANICKAVELU AMMAL

AND

MY FRIEND

C. RANGAVADIVELU

# PREFACE.

This book contains five humorous pieces of different kinds—hence I have called it a Kadambam or Mixture.

The first is an adaptation of a humorous English book entitled "The Travels of Baron Manchausen"; the second is a Farce entitled "Stri Rajyam" or Woman's Government; the rest of the pieces are humorous stories.

The Public are hereby informed that the copyright of these humorous pieces belong to me; if anybody wants to make use of them in any way, they must take my previous permission.

25th AUGUST '38<br>PAMMAL LODGE,<br>MADRAS.

THE AUTHOR.

# பிரம்மாண்ட டப்புவின்

## உலகப் பிரயாணங்கள்



## முகவுரை



நான் இவ்வுலகில் செய்த அநேகப் பிரயாணங்களைப்பற்றி என் நண்பர்களுக்கு நான் தெரிவிக்குமுன் எனது விர்த்தாந்தத்தை அவர்கள் கொஞ்சம் அறிய விரும்புவார்களென்று நம்பி, அதைச் சுருக்கி எழுதுகிறேன்.

எங்கள் குடிப் பிறப்பு இல்லாவூர்; எங்கள் தகப்பனார் பெயர் 'டப்பு'; அவருக்கு நாங்கள் நான்கு பெயர் பிள்ளைகள் பிறந்தோம்; எங்கள் பெயர் முறையே அந்தர் டப்பு, ஆகாச டப்பு, பிரம்ம டப்பு, பிரமாண்ட டப்பு என்பதாம். எங்கள் தகப்பனார் கற்பனா சாஸ்திரம் என்னும் பெயர் பெற்ற சாஸ்திரத்தில் மிகவும் நிபுணர்; அவரை இந்த சாஸ்திரத்தில் தோற்கடிக்க வேண்டுமென்று பலர்முயன்றும் பயன் படாமற் போயிற்று. ஒரு சமயம் எங்கள் ஊருக்கு அடுத்த ஊரில்இருந்த பொய்யாம்மொழிப் புலவர் என்பவர், அவரை மேற்கண்ட சாஸ்திரத்தில் வெல்ல வேண்டு மென்று எங்கள் ஊருக்கு வந்தார். அச்சமயம் எங்கள் வீட்டில், என் தகப்பனாரும் தமயன்மார்களும் இல்லை, நான் ஒருவன் மாத்திரம் இருந்தேன்; வந்தவரை வரவழைத்து உட்காரச் சொல்லி உபசாரம் செய்து, வந்த சேதி என்னவென்று நான் வினவ, அவர், "உன் தகப்பனாரை கற்பனா சாஸ்திரத்தில் வெல்ல வேண்டுமென்று வந்திருக்கிறேன்" என்று பதில் கூறினார். "அப்படியா சமாசாரம், ஆனால் முதலில் என்னை வென்று விட்டு, பிறகு என் தகப்பனாரிடம் வாதாட முயலும், என்று நான் கூற, "அப்படியே ஆகட்டும் உன்னுடைய கற்பனா சக்தியைக் காட்டு பார்ப்போம் என்றார்", உடனே நான் என் தகப்பனார் கற்பனா சக்தியில் எனக்கு ஆயிரத்திலொரு பங்கு கூட இல்லை, ஆயி

னும் ஏதோ தெரிந்தமட்டும் சொல்லுகிறேன்—என் தகப்பனார் கலியாணத்தின் போது, பிள்ளையாருக்கு முதலில் என்னைத் தேங்காய் உடைக்கச் சொன்னார்கள், அப்படியே நான் தேங்காயை உடைக்க, மேல் முடி ஆகாசமாகிவிட்டது, கீழ் முடி பூமியாகி விட்டது, அதிலிருந்த தண்ணீர் சமுத்திர ஜலமாகி விட்டது, ஆகவே இதெல்லாம் எனக்கு சொந்தமாகிவிட்டது; நீங்கள் ஏதாவது கற்பனை சாஸ்திரத்தில் பேசுவதென்றால் இந்த எல்லைக்கு வெளியிலிருந்து பேசுங்கள்" என்றேன் இதைக் கேட்டவுடன் அவர் பிரமித்துப் போய், "உனக்கு வயதென்ன அப்பா?" என்று கேட்டார்; அதன் பேரில் எனக்கு வயது ஐந்தாகிறது என்று தெரிவிக்க, உடனே தன் மூக்கின் பேரில் விரலை வைத்துக் கொண்டு மெல்ல அப்படியே தன் ஊருக்குத் திரும்பிப் போய் விட்டார்.

இப்படிப்பட்ட கீர்த்தி வாய்ந்தவர் எங்கள் தகப்பனார்; அவருக்குப் பிற்காலம், அவர் பெயர் கெடாதபடி அவரது நான்கு பிள்ளைகளாகிய நாங்கள் அவர் சாஸ்திரத்தையே கைப்பற்றி பழகி வந்தோம். எனக்குப் பிறந்தது முதல் பிரயாணம் செய்வதில் மிகவும் பிரியம்; ஆகவே எனக்கு வயது 18 ஆனவுடன் எப்பொழுதும் வெளியூர்களுக்குப் பிரயாணம் செய்வதிலேயே என் காலத்தை கழித்து வருகிறேன்; அப்படி செய்த பிரயாணங்களில் நடந்த விஷயங்களுள், சிலவற்றை எனது நண்பர்களுக்கு இனி தெரிவிக்கிறேன்.

## முதல் கதை

## சிங்கத்தை வென்ற கதை

ஒரு முறை ஆப்பிரிக்கா தேசத்திலுள்ள எகிப்து தேசத்தரசர், என்னைத் தன் விருந்தினனாக அழைத்திருந்தார். எங்களிருவருக்கும் வேட்டையாடுவதில் இருந்த மிகுந்த பிரியமே எங்களை முதல் முதல் சிநேகிதர்களாக்கி வைத்தது. ஒரு நாள் நான் காலை முதல் நீல நதிக்கரையோரமாக சாயங்காலம் வரையில் சிங்க வேட்டையாடி

விட்டு, களைப்புற்றவனாய், அதிக நாழிகை பொறுத்து உணவை உண்டு விட்டு நதிக்கரையோரமாக உறங்கினேன். சற்று நேரம் பொறுத்துக் கண் விழித்துப்பார்க்க, சாயங்காலமாய் விட்டது. இவ்வளவு நேரம் தூங்கிவிட்டோமே அரசர் ஏதாவது கோபங் கொள்வாரே என்றும் கவலையுடன் எழுந்திருக்க முயலும் பொழுது, சற்று தூரத்தில் உயரமாக வளர்ந்திருந்த நாணற்கோரையின் பக்கம் சல சல வென்று ஒரு சப்தம் என் காதிற் பட்டது. என்ன வென்று திரும்பிப்பார்க்க, ஒரு சிங்கத்தைக் கண்டேன்! என் ஆச்சரியத்தை என்னென்று சொல்லுவேன்! என் கையிலோ ஒரு ஆயுதமுமில்லை. சாயங்காலத்தில் அதன் இரு கண்களும் இரண்டு பெரிய நெருப்புப்பொறிகள்போல் என் கண்ணுக்குப் புலப்பட்டன. பசித்திருக்கும் அச்சிங்கத்திற்கு ஆகாரமாக அதன் வயிற்றில் நான் சீக்கிரம் வாசம் பண்ணவேண்டியதுதான் என்று தீர்மானித்தேன். ஆயினும் என் தைரியத்தை மாத்திரம் நான் கைவிடவில்லை. அச்சிங்கத்திற்கு நான் இரையாவதானாலும் ஒரு கை பார்த்துவிட்டுத் தான் பிறகு அக் கதியை அடையவேண்டுமென்று நிர்மானித்தவனாய், நான் என் சொக்காயின் கைகளைத் தள்ளிக்கொண்டு அதை எதிர்க்க விரைந்து நாலடி வைத்தேன்; இதற்குள் அச்சிங்கமானது என் மீது பாய யத்தனித்தது. அச்சமயம் என் தூர் அதிர்ஷ்டத்தினாலோ, அல்லது என் அதிர்ஷ்டத்தினாலோ, அங்கிருந்த ஒரு கல் தடுக்கி பொத்! என்று கீழே விழுந்தேன். அட்சணம் என் மீது பாய்ந்த சிங்கமானது, நான் கீழே விழுந்ததினால் தன் குறி தப்பி, என் உடலின் மீது பாய்ந்து சென்றது. ஒரு க்ஷணத்திற்கெல்லாம் என் பின்புறமாக (நதியின் பக்கமாக) சிங்கமானது கர்ஜிப்பதை விட்டு, ஏதோ துயரமடைந்ததுபோல் சப்திக்க ஆரம்பித்தது, என்னடா என்று திரும்பிப் பார்த்தால், மிகவும் ஆச்சரியகரமான ஒரு காட்சியைக்கண்டேன்! பிறகு நான் ஊகித்தறிந்தபடி, நான் நதியோரம் நின்றுகொண்டிருந்த பொழுது அதன் கரையிலிருந்த ஒரு பெரிய முதலையானது என்னை விழுங்க வாயைத்திறந்து கொண்டு வந்து கொண்டிருக்கவேண்டும்; இதற்குள்ளாக சிங்கத்தைக் கண்டு நான் திரும்பி அதனை எதிர்க்கப் போனபோது அம் முதலை பின்னால் என்னைத் தொடர்ந்து வந்திருக்கவேண்டும்; சிங்கமானது தன் குறி

தப்பிப் பாய்ந்தபொழுது, நேராக அப்பெரும் முதலைவாயில் சிக்கி யிருக்கவேண்டும், என்று அறிந்தேன். நான் திரும்பிப் பார்த்த பொழுது சிங்கத்தின் தலை முதலைவாயில் அப்பொழுது தான் போய்க்கொண்டிருந்தது! சிங்கத்தின் தலை முதலையின் வாயில் நுழைந்துக்கொள்ள இரண்டும் அவைகளின் பாஷைகளில் கூக்குர லிட்டுச் சண்டைபோட ஆரம்பித்தன! சிங்கமானது தான் தப்பித் துக்கொள்ள முதலையின் வயிற்றில் நுழைய ஆரம்பித்தது! முதலை யானது சிங்கத்தை விழுங்க ஆரம்பித்தது. கடைசியில் சிங்கம் அதிக பலசாலியாயிருந்த படியால் முதலையின் பின்புறமாக வர ஆரம்பித்தது. இதற்குள்ளாக நான் எனது நண்பராகிய எகிப்து தேசத்தரசரிடம் ஓடிப்போய் அவரது வாளை வங்கிக்கொண்டு வேகமாய் வந்தேன். அப்பொழுது தான் சிங்கத்தின் தலை முதலை யின் பின்புறமாக வெளிவர ஆரம்பித்தது. இதுதான் சமயமென்று அவ்வாளினுல் அதன் தலையை ஒரே வெட்டாக வெட்டினேன். வெட்டுண்ட தலை என் காலருகில் விழ அதன் தாடியைப்பிடித்து இடது கரத்தால் தூக்கிக்கொண்டேன். வயிறு கிழிந்து முதலை இறந்து போகவே, அதன் வாலை வலது கரத்தால் பிடித்து இழுத் துக்கொண்டு, என் நண்பர் எகிப்து தேசத்து அரசர் இருக்குமிடம் இப்படியே போய்ச் சேர்ந்தேன். உடனே அவருக்கு நடந்த விர் தாந்தத்தையெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்ல, அவர் எனது தைரியத்தையும் வீரத்தையும் மெச்சி “ஷேர் மக்கர் ஷா” என்கிற பட்டப் பெயர் அளித்தார்; அதன் பொருள் “சிங்க முதலை அரசன்” என்பதாம். நான் அந்த அரசருக்கு அப்பெருத்த முதலை யின் கிழிந்த உடலைத் தைத்துப் பரிசாகக் கொடுத்தேன். அதைத் தன் தேசத்திலுள்ள கெய்ரோ என்னும் பட்டணத்திலுள்ள மியூஜியத் (Museum) துக்குக் கொடுத்து விட்டார். அது உயிரு டனிருந்த பொழுது, சுமார் பதினறு அடி நீளமிருக்கவேண்டும்; இறந்த பின் நான் அளந்து பார்த்தேன். இப்பொழுதும் இதைப் படிப்பவர்கள் இக்கதையைப்பற்றி ஏதாவது சந்தேகப்பட்டால், உடனே எகிப்து தேசம் போய் கெய்ரோ மியூஜியத்தில் அம் முதலை யின் உடலைப் பார்த்துக்கொள்ளலாம். ஆனல், எகிப்து தேசம் மிகுந்த வெயிலுள்ள தேசமாகையால் சூரிய வெப்பத்தினுல் அதன்

உடல் ஒரு வேளை ஏழு அல்லது எட்டடி சுருங்கிப் போயிருக்கலாம். அச்சிங்கத்தின் தலையைப் பதப்படுத்தி என் வீட்டில் மேஜையின் பேரில் நெடுநாள் வைத்திருந்தேன். அநேக வருஷங்கள் அப்படியே யிருந்தது; சென்ற தாது வருஷத்துக் கருப்பில் அனேத ஒரு நாள் இரவு மிகவும் பசியாயிருந்த பூனை ஒன்று அதைத் தின்று விட்டது. மறுநாள் நான் எழுந்து பார்த்தபொழுது, அச்சிங்கத்தின் பற்கள் மாத்திரம் கீழே விழுந்து கிடந்தன. அவற்றுள் ஒன்றை ஞாபகார்த்தமாக நான் என் கடியாரச் சங்கிலியில் பொன் கட்டுப்போட்டு மாட்டிக்கொண்டிருக்கிறேன். யார் வேண்டுமானாலும் இன்றைக்கும் அதைப்பார்த்துக்கொள்ளலாம். இதை வாசிக்கும் நண்பர்கள் அந்த சிங்கத்தின் உடல் என்ன வாயிற்றென்று அறியவிருப்பமானால், அம்முதலையின் வயிற்றைக் கீறித்தான் பார்க்கவேண்டும்; அது ஜீரணமாகிப் போய்விட்டதோ இல்லையோ என்றால் நிஜமாகச் சொல்ல முடியாது.



## இரண்டாவது கதை

# மாதாக் கோயிலுச்சியில் குதிரையை கட்டிய கதை



எனக்கு மிருக வேட்டையில் மிகவும் பிரியமுண்டு என்பதை என் நண்பர்களெல்லாம் நன்கு அறிவார்கள். ஆகவே ஒரு முறை ருஷியா தேசத்து அரசர் என்னைத் தன் ஊருக்கு வரவழைத்து என்னைத் தன் தேசத்திலுள்ள காடுகளிலெல்லாம் வேட்டையாடும் படி உத்திரவு கொடுத்தார். அச் சமயம் நேர்ந்த சில சம்பவங்களை உண்மையாக, மற்ற வேட்டைக்காரர்களைப் போல் பொய் கலப்பில்லாமல், எழுதுகிறேன்.

ஒரு முறை ஒரு காட்டில், காலை முதல் என் குதிரை மீதேறி வேட்டையாடி பல மிருகங்களைக் கொன்று களைப்படைந்தேன். சாயங்காலமாகி இருட்டவும் ஆரம்பித்துவிட்டது. என்னுடன் வந்த பரிவாரங்களெல்லாம், வேகமாய்ச் செல்லும் என் குதிரையைப்

பின் பற்றி வர அசக்தர்களாகி எங்கேயோ பிரிந்து விட்டனர். நான் தனியனுனேன். இரவு எங்காவது பட்டணம் சென்று தங்கவேண்டு மென்று, களைத்துப் போன என் குதிரையை மெல்ல நடத்திக் கொண்டு தூரத்தில் வெளிச்சம் தெரிந்த பக்கமாகப் போனேன். நான் போகப் போக அந்த வெளிச்சமும் தூரத்தில் போக ஆரம் பித்தது. மறுநாள் விசாரித்த பிறகுதான் இத்தீபத்தின் உண்மையை யறிந்தேன். இதை உண்மையறியாத பாமரஜனங்கள் கொள்ளிவாய்ப் பிசாசு என்பார்கள்; இது முற்றிலும் பொய். இது காடுகளில் சேற் றில் உண்டாகும்படியான ஓர் வித தீயாகும். இதைப் பற்றிச் சென்ற திறைல், மிகவும் இருட்டிவிட்டது; என் குதிரையும் நடக்க சக்தி யற்றுப் போய் விட்டது. அதன் பேரில், சரி இனி இரவில் எங்கு போவது என்று அந்த அபிப்பிராயத்தைக் கைவிட்டவனுய், குதிரையை ஏதாவது மரமொன்றில் கட்டிவிட்டு, நான் பக்கத்தில் படுத்துறங்கலாமென்று தீர்மானித்துப் பார்க்க, நான்கு பக்கமும் ஓரே பனியாயிருந்தது. சற்று தூரத்தில் ஏதோ ஒரு மூளை தெரி வது போல் தோன்றியது. அங்கு கஷ்டப்பட்டு என் குதிரையைக் கட்டிவிட்டு காலை முதல் வேட்டையாடிய சிரமத்திறைல் நானும் பக்கத்தில் ஒரு புறமாகப் படுத்து உடனே நித்திரை போய் விட்டேன்

காலை எழுந்து கண்விழித்துப் பார்த்தால், நான் ஒரு பட்ட ணத்தின் தெருவில் படுத்திருப்பதைக் கண்டேன்! நான்கு புறமும் வீதிகளும் வீடுகளும் இருந்தன. என் குதிரையைக் காணேம்! நான் என்ன செய்வது? பொழுது விடிந்ததும் வீதிகளில் ஜனங்கள் உலாவ ஆரம்பித்தனர் அவர்கள் எல்லாம் கும்பல் கும்பலாக, நான் இருந்த இடத்திற்கு வடக்கு புறமிருந்த ஒரு மாதாக் கோயிலைக் காட்டிக் காட்டி ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நான் அநேக பாஷைகளில் நிபுணனுயினும் இந்த ருஷியா தேசத்து பாஷையைக் கற்கவில்லை. ஆகவே அவர்கள் ஆச்சரியத்துடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தது எனக்கு கொஞ்சமும் அர்த்தமாகவில்லை; ஆயி னும் அவர்கள் எல்லாம் அம்மாதாக் கோயிலின் கோபுரத்தின் சிக ரத்தைச் சுட்டிக் காட்டிக் கொண்டிருப்பதைக்கண்டேன். உடனே அவர்கள் எல்லாம் எதைச் சுட்டிக் காட்டுகிறுர்கள் என்று தலை தூக்கி

அக்கோபுரத்தின் சிகரத்தைப் பார்க்க, அச்சிகரத்தின் உச்சியில், கட்டப்பட்டு என் குதிரை தொங்கிக் கொண்டிருந்ததைக் கண்டேன்! எனக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை; நேற்றிராத்திரி எங்கு பார்த்தாலும் பனிக்கட்டியாயிருந்த ஓர் இடத்தில் நமது குதிரையை, ஒரு முளையில் கட்டிவிட்டு, ஒரு புறமாகப் படுத்துக் கொண்டோமே, இன்று காலை நாம் இந்த ஊருக்கு எப்படி வந்தோம்? நமது குதிரை இம்மாதாக் கோயிலின் சிகரத்தில் எப்படி கட்டப்பட்டு தொங்கிக் கொண்டிருக்கிறது? என்று என் நுண்ணிய அறிவைக் கொண்டு ஆராய்ந்து பார்த்தேன். உடனே உண்மை வெளியாயது எனக்கு! நானிருந்த ஊர் ருஷியா தேசத்தில் ஓர் ஊர் என்பது எனக்கு ஞாபகம் வந்தது. முந்தியநாள் இரவு நான் அந்த ஊருக்கு வந்த பொழுது, பனிபெய்து ஸ்னோ (Snow) என்னும் பனிக்கட்டிகள் நிறைந்து பட்டணமெங்கும் அம்மாதிரிக் கட்டிகளால் மூடப்பட்டிருந்தது; இம்மாதாக் கோயிலின் கோபுர சிகரம் மாத்திரம் அதிக உயரமாயிருந்தபடியால், அப்பனிக் கட்டியின் மீது ஒரு முளையைப் போல தோன்றி யிருக்க வேண்டும். இவ்வுண்மையை யறியாது ஏதோ தெய்வாதீனமாய் நமது குதிரையைக் கட்ட ஒரு ஆப்பு கிடைத்ததே என்று நான் என் குதிரையை அதில் கட்டிவிட்டு பக்கத்தில் படுத்துறங்கியிருக்க வேண்டும்; காலையில் சூரியன் உதயமாக அப்பனிக் கட்டிகளெல்லாம் சூரிய வெப்பத்தினுல் உருகிப் போகவே, நான் மெல்ல நகிழ்ந்து கீழே தெருவில் வந்து சேர்ந்திருக்க வேண்டும்; என் குதிரையோ அம்மாதாக் கோயிலில் சிகரத்தில் கட்டப் பட்டதினுல், அங்கே தொங்கிக் கொண்டிருக்க வேண்டும்; என்னும் உண்மை வெளியாயது. நான் முன்னுல் வேட்டையாடிய இளைப்பினுல் வந்த நல்லதூக்கத்தில் பனிக்கட்டிகள் உருகி நான் மெல்ல கீழே தெருவில் விழுந்ததை அறியாமற் போனேன். உடனே என்குதிரையின் மீது பரிதாபப் பட்டு, என் கைத் துப்பாக்கியை எடுத்து கீழிருந்தபடி சுட, அது கட்டியிருந்த கயிற்றண்டை சரியாகத்தாக்கி, அக்கயிற்றை அறுத்தது. குதிரையும் கீழே விழுந்தது. உடனே அதன் பேரில் ஏறிக் கொண்டு ருஷியா தேசத்து அரசர் தங்கியிருந்த ஊர் போய்ச் சேர்ந்தேன்.

இது நேர்ந்ததின் உண்மையைப் பரீட்சிக்க வேண்டுமென்று யாருக்காவது விருப்பமிருந்தால் உடனே ருஷியா தேசத்திற்குப் போய் மாஸ்கோ என்னும் ஊரில் இருக்கும் ஒரு பெரிய மாதாக் கோயிலின் சிகரத்தை இன்றும் பார்க்கலாம். ஆனால் அதில் என் குதிரையைக் கட்டிய கயிற்றின் துண்டு இன்னும் இருக்கிறதோ என்னமோ நான் உண்மையாகச் சொல்ல முடியாது. இருந்தாலும் இருக்கலாம் இல்லாவிட்டாலும் இராது என்பது என்னவோ உண்மை.



## மூன்றுவது கதை

# கொடிய கோனையை கொன்ற கதை

மறு நாள் அரசரது அரண்மனையில் நான் கொஞ்சம் இளைப் பாறிய பிறகு, அரசர் என்னைத் தன் அறைக்கு அவசரமாக வரவழைத்தார். என்னவோ வென்று நான் துரிதமாய்ப் போய்ப் பார்த்தேன். அவர் தன் பிரஜைகளெல்லாம் அருகாமையிலுள்ள ஓர் காட்டில் ஒரு பெரிய பிரம்மாண்டமான கோனைய், ஆடு மாடுகளை அழிப்பதாயும், அந்தப் பக்கம் செல்லும் ஜனங்களுக்கும் மிகவும் இடையூருக இருப்பதாகவும் தெரிவித்து என்னை அதைக் கொல்லும்படி வேண்டினார். அச்சமயம்அவர் பக்கத்திலிருந்த அவரது மனைவி, ருஷியா தேசத்துராணி, அப்படிப்பட்ட கோனையை முடியுமானல் உயிருடன் பிடித்துவந்தால், தங்கள் தலைநகரமாகிய பீடர்ஸ்பர்க் என்னும் ஊரிலுள்ள "உயிருள்ள மிருகக்காட்சி"த் தோட்டத்தில் வைக்கலாமென்று கேட்டார்கள். அப்படி உயிருடன் பிடித்து வருவது அசாத்தியமானல், கொன்ற அதன் உடலையாவது கொண்டு வந்தால் அதனைப்பதன படுத்தி, அங்குள்ள மியூஜியத்தில் வைக்க விரும்புவதாகத் தெரிவித்தார்கள். அதன் பேரில் ஏதோ முயன்று பார்க்கிறேன் என்று சொல்லிவிட்டு உடனே அவசரமாகப் புறப்பட்டேன் அக்காட்டிற்கு. அக்காட்டருகில் வந்ததும் அங்கு ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டிருந்தவர்களை விசாரித்து அக்கோனயிருக்குமிடம் அறிந்து, அதன் அடிச்சுவடுகளைக் கண்டு பிடித்து அவற்றைப்

பற்றி ஜாக்கிரதையாகச் சென்றேன். அந்த இடையர்களெல்லாம் கொஞ்சம் தூரம் எனக்கு வழி காண்பித்துவிட்டு, பிறகு அக்கொடுங் கோனுய்க்குப் பயந்தவர்களாய், பின் தங்கிவிட்டனர். நான் மாத்திரம் எனக்கு சுபாவமாயுள்ள தைரியத்துடன் என் துப்பாக்கியை மாத்திரம் கையிலெடுத்துக் கொண்டு, அவ்வடர்ந்த காட்டிற்குள் கோனுயைத்தொடர்ந்து சென்றேன். கொஞ்சதூரம் சென்றபின் ஆகாயத்தையளாவிய விருட்சங்கள் மேலே அடர்ந்திருந்தபடியால் சற்று இருளாயிருந்தது. அதனால் நான் எத்திசை நோக்கிச் செல்கிறேன் என்பதையும் கவனிக்கமுடியவில்லை. உடனே ஒரு குகையின் வாயிலுக்கெதிர்போய்ச் சேர்ந்தேன். குகைக்குள் ஒருவேளை அக் கோனுய் தங்கியிருக்கக்கூடும் என்று எண்ணினவனுய் உற்றுப் பார்க்க, சற்று தூரத்தில் ஒரு யானைக்குட்டி போன்ற ஒரு உருவம் தெரிந்தது. அதுதான் அக்கோனுய் என்று கண்டவனுய், இன்னும் அருகிற்சென்று உற்றுப்பார்க்க, அதன் இரு கண்களும் இரண்டு நெருப்புப்பொறிகள் போல் பிரகாசித்தன! உடனே அதைச் சுடுவதற்காக என் துப்பாக்கியைக் கையிலெடுத்து, அதனுள் குண்டு போட என் குண்டுப்பையைப் பக்கத்தில் தடவிப்பார்க்க அது சாதாரணமாயிருக்குமிடம் காணப்படவில்லை! என்னுடைய மனநிலைமை அச்சமயம் எப்படி யிருந்திருக்கவேண்டுமென்று நீங்களே யோசித்து அறியலாம். அப்பயங்கரமான கோனுய்க்கும் எனக்கும் சுமார் பத்து கஜம் தானிருந்தது. என்னைக் கண்டதும் அக் கோனுய், நம்மை யாரடா இவ்வளவு தைரியமாக எதிர்க்க வருவது என்று ஆச்சர்யத்துடன் பார்த்தது போலும்! அதை நேராகப் பார்ப்பதைவிட்டு என் கண்களை சற்று அப்புறம் அகற்றினால், இப்படிப்பட்ட துஷ்டமிருகங்களின் வழக்கப்படி, தன்னைக் கண்டு பயப்படுவதாக எண்ணி, என்மீது உடனே பாய்ந்து என்னைக் கொன்று விடும் என்பதை அறிந்தவனுய், என் கண்களை அதன் கண்களை விட்டகலாது உற்றுப் பார்த்தேன்! இப்படி நாங்களிருவரும் பத்து நிமிஷம் வரையில் ஒருவரை ஒருவர் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தோம். ஆயினும் எத்தனை நேரம் நாங்கள் இப்படிப் பார்த்துக் கொண்டிருக்கக்கூடும்? அப்பொழுது எனக்கு ஒரு யுக்தி தோன்றியது. உடனே ஒரு கையால் என் துப்பாக்கியைப் பிடித்துக்

இது நேர்ந்ததின் உண்மையைப் பரீட்சிக்க வேண்டு மென்று யாருக்காவது விருப்பமிருந்தால் உடனே ருஷியா தேசத்திற்குப் போய் மாஸ்கோ என்னும் ஊரில் இருக்கும் ஒரு பெரிய மாதாக் கோயிலின் சிகரத்தை இன்றும் பார்க்கலாம். ஆனால் அதில் என் குதிரையைக் கட்டிய கயிற்றின் துண்டு இன்னும் இருக்கிறதோ என்னமோ நான் உண்மையாகச் சொல்ல முடியாது. இருந்தாலும் இருக்கலாம் இல்லாவிட்டாலும் இராது என்பது என்னவோ உண்மை.

—oo❦oo—

## மூன்றாவது கதை

# கொடிய கோனாயை கொன்ற கதை

மறு நாள் அரசரது அரண்மனையில் நான் கொஞ்சம் இளைப் பாறிய பிறகு, அரசர் என்னைத் தன் அறைக்கு அவசரமாக வர வழைத்தார். என்னவோ வென்று நான் துரிதமாய்ப் போய்ப் பார்த்தேன். அவர் தன் பிரஜைகளெல்லாம் அருகாமையிலுள்ள ஓர் காட்டில் ஒரு பெரிய பிரம்மாண்டமான கோனாய், ஆடு மாடுகளை அழிப்பதாயும், அந்தப் பக்கம் செல்லும் ஜனங்களுக்கும் மிகவும் இடையூறாக இருப்பதாகவும் தெரிவித்து என்னை அதைக் கொல்லும் படி வேண்டினார். அச்சமயம் அவர் பக்கத்திலிருந்த அவரது மனைவி, ருஷியா தேசத்துராணி, அப்படிப்பட்ட கோனாயை முடியுமானால் உயிருடன் பிடித்துவந்தால், தங்கள் தலைநகரமாகிய பீடர்ஸ்பர்க் என்னும் ஊரிலுள்ள "உயிருள்ள மிருகக்காட்சி"த் தோட்டத்தில் வைக் கலாமென்று கேட்டார்கள். அப்படி உயிருடன் பிடித்து வருவது அசாத்தியமானால், கொன்ற அதன் உடலையாவது கொண்டு வந்தால் அதனைப்பதன படுத்தி, அங்குள்ள மியூஜியத்தில் வைக்க விரும்புவ தாகத் தெரிவித்தார்கள். அதன் பேரில் ஏதோ முயன்று பார்க்கி றேன் என்று சொல்லிவிட்டு உடனே அவசரமாகப் புறப்பட்டேன் அக்காட்டிற்கு. அக்காட்டருகில் வந்ததும் அங்கு ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டிருந்தவர்களை விசாரித்து அக்கோனாயிருக்கு மிடம் அறிந்து, அதன் அடிச்சுவடுகளைக் கண்டு பிடித்து அவற்றைப்

பற்றி ஜாக்கிரதையாகச் சென்றேன். அந்த இடையர்களெல்லாம் கொஞ்சம் தூரம் எனக்கு வழி காண்பித்துவிட்டு, பிறகு அக்கொடுங் கோனுய்க்குப் பயந்தவர்களாய், பின் தங்கிவிட்டனர். நான் மாத்திரம் எனக்கு சுபாவமாயுள்ள தைரியத்துடன் என் துப்பாக்கியை மாத்திரம் கையிலெடுத்துக் கொண்டு, அவ்வடர்ந்த காட்டிற்குள் கோனுயைத்தொடர்ந்து சென்றேன். கொஞ்சதூரம் சென்றபின் ஆகாயத்தையளாவிய விருட்சங்கள் மேலே அடர்ந்திருந்தபடியால் சற்று இருளாயிருந்தது. அதனுல் நான் எத்திசை நோக்கிச் செல்கிறேன் என்பதையும் கவனிக்கமுடியவில்லை. உடனே ஒரு குகையின் வாயிலுக்கெதிர்போய்ச் சேர்ந்தேன். குகைக்குள் ஒருவேளை அக் கோனுய் தங்கியிருக்கக்கூடும் என்று எண்ணினவனுய் உற்றுப் பார்க்க, சற்று தூரத்தில் ஒரு யானைக்குட்டி போன்ற ஒரு உருவம் தெரிந்தது. அதுதான் அக்கோனுய் என்று கண்டவனுய், இன்னும் அருகிற்சென்று உற்றுப்பார்க்க, அதன் இரு கண்களும் இரண்டு நெருப்புப்பொறிகள் போல் பிரகாசித்தன! உடனே அதைச் சுடுவதற்காக என் துப்பாக்கியைக் கையிலெடுத்து, அதனுள் குண்டு போட என் குண்டுப்பையைப் பக்கத்தில் தடவிப்பார்க்க அது சாதாரணமாயிருக்குமிடம் காணப்படவில்லை! என்னுடைய மனநிலைமை அச்சமயம் எப்படி யிருந்திருக்கவேண்டுமென்று நீங்களே யோசித்து அறியலாம். அப்பயங்கரமான கோனுய்க்கும் எனக்கும் சுமார் பத்து கஜம் தானிருந்தது. என்னைக் கண்டதும் அக் கோனுய், நம்மை யாரடா இவ்வளவு தைரியமாக எதிர்க்க வருவது என்று ஆச்சர்யத்துடன் பார்த்தது போலும்! அதை நேராகப் பார்ப்பதைவிட்டு என் கண்களை சற்று அப்புறம் அகற்றினுல், இப்படிப்பட்ட துஷ்டமிருகங்களின் வழக்கப்படி, தன்னைக் கண்டு பயப்படுவதாக எண்ணி, என்மீது உடனே பாய்ந்து என்னைக் கொன்றுவிடும் என்பதை அறிந்தவனுய், என் கண்களை அதன் கண்களை விட்டகலாது உற்றுப் பார்த்தேன்! இப்படி நாங்களிருவரும் பத்து நிமிஷம் வரையில் ஒருவரை ஒருவர் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தோம். ஆயினும் எத்தனை நேரம் நாங்கள் இப்படிப் பார்த்துக் கொண்டிருக்கக்கூடும்? அப்பொழுது எனக்கு ஒரு யுக்தி தோன்றியது. உடனே ஒரு கையால் என் துப்பாக்கியைப் பிடித்துக்

கொண்டு மற்றொரு கையால் என் காலண்டையிருந்த கற்களில் என் துப்பாக்கிக் குழாய்க்குச் சரியான ஒரு கல்லை எடுத்து, மருந் தடைத்திருந்த என் இரண்டு குழாய்களையுள்ள துப்பாக்கியில் ஒரு குழாயில் அதைப் போட்டு கெட்டித்தேன். உடனே எனக்கு இன் னொரு யுக்தி தோன்றியது. ஒருவேளை ஒரு குண்டு தவறினாலும் தவறுமென்று மற்றொரு குழாயிலும் அப்படியே மற்றொரு கல்லைப் போட்டு கெட்டித்துக் கொண்டேன். இவ்வளவு நேரமும் என கண்களை அதன் கண்களைப் பார்ப்பதைவிட்டு அகற்றவில்லை. அது வும் என் கண்களைப் பார்ப்பதைவிட்டு ஆகற்றவில்லை! பிறகு ஒரு க்ஷணம் என் கண்களை நான் சிமிட்ட, அச்சமயம் அக் கடுங் கோனாய் இதுதான் சமயம் என்று என் மீது பாய்வதற்காகக் குனிந்தது. நானும் இதுதான் சமயம் என்று, திறந்து கொண்டிருந்த அதன் வாய்க்கு நேராகக் குறிவைத்து என் துப்பாக்கியின் ஒரு குழாயைச் சுட்டேன்; அதில் கெட்டித்திருந்த கல்லானது அக்கோனாயின் வாயில் நுழைந்தது; உடனே குண்டு அடிபட்ட அக்கோனாய் பயத்தால் ஒரு பாய்ச்சலாக குகையை விட்டு வெளியே ஓட ஆரம்பித்தது! நான் உடனே அதைப் பின்பற்றி ஓட ஆரம்பித்தேன். அக்காட்டில் சுமார் ஆறு மயில் இப்படி நாங்கள் ஓடியிருப்போமென்று நினைக்கிறேன். கடைசியாக கோனாய் களைப்படைந்து தளர்ந்து மெல்ல நடக்க ஆரம்பித்தது. இதுதான் தக்கசமயம் என்று எண்ணினவனாய், எனது துப்பாக்கியின் மற்றொரு குழாயையும் அதன் பின் புறத்தில் குறிவைத்து சுட்டேன். உடனே அதிலிருந்த மற்றொரு கல்லானது கோனாயின் பின்புறம் நுழைந்தது; ஒரு க்ஷணத்திற் கெல்லாம் கோனாயின் வயிற்றிலிருந்து ஒரு பெரும் சப்தம் கேட்டது! என்ன ஆச்சரியம் என்று கீழே விழுந்த அக்கொடிய மிருகத்தின் அருகிற் சென்று பார்ப்பதற்குள், அக்கோனாயின் உடல் வெடித்து சின்னா பின்னமாய்க் கிழிக்கப்பட்டு ஆகாயத்தில் வெகுதூரம் வரையில் பறந்து விழுந்து விட்டது. கோனாயிருந்த விடத்திற் போய்ப்பார்க்க கோனாயே அங்கு அகப்படவில்லை! நான் அங்கு கண்டதெல்லாம் இரண்டு கற்களே! அக் கற்களைப் பிறகு பரிசோதித்துப் பார்த்த தில், சகுமுகிக் கற்கள் என்று கண்டேன். அப்பொழுது தான் கோனாயின் உடல் சின்னாபின்னமாய்ப் போனதற்குக் காரணத்தை

உண்மையில் அறிந்தேன்! முதலில் சுட்டகல் வாய்வழியாக வயிற்றுக்குள் நேராய்ப்போய் தங்கி யிருக்கவேண்டும். பிறகு இரண்டாவது சுட்ட கல் பின் பக்கமாக வயிற்றுக்குள் நுழைந்து முதற் சுட்ட கல்லைச் சந்தித்தவுடன் இவ்விரண்டு கற்களும் ஒன்றையொன்று தாக்கவே நெருப்பு உண்டாகி, வெடி மருந்தைப் போல் வெடித்து அக்கடுங் கோனுயின் உடலைச் சின்னுபின்னமாய்க் கிழித்திருக்க வேண்டும். ருஷியா தேசத்து அரசர்க்கும் ராணிக்கும் இச்செய்தியைத் தெரிவித்து இன்னொரு சமயம் அப்படிப்பட்ட கோனுய் என் கண் முன் அகப்பட்டால் உயிருடன் பிடித்து வருவதாகச் சொல்லி சமாதானப்படுத்தினேன்.

இக்கதையைப்பற்றி யாராவது சந்தேகப்பட்டால், என்றைக்கு வேண்டுமென்றாலும் இரண்டு சக்கிமுக்கிக் கற்களை எடுத்துக் கொண்டு என் வீட்டிற்கு வந்தால், என் இரண்டு குழாய் துப்பாக்கியைக் கொண்டு, அவர்கள் வாய்வாழியாக ஒரு கல்லைச் சுட்டு மற்றொன்றை பின்புறமாகச் சுட்டு, அவ்விரண்டு கற்களையும் அவர்கள் வயிற்றில் சந்திக்கச் செய்து அவர்கள் உடலை வெடிக்கச் செய்கிறேன். யார் வேண்டுமென்றாலும்இப் பரீட்சை பார்க்கலாம்.

—ooOoo—

## நான்காவது கதை

# ஆச்சரிமான மான் வேட்டை

ஒரு முறை காலஞ்சென்ற மாட்சிமை தங்கிய விக்டோரியா ராணி அவர்கள் என்னை சீமைக்கு அழைத்திருந்தனர். அச்சமயம் வழக்கம் போல் அவர்கள் கோடைகாலத்தில் ஸ்காட்லாண்டு தேசத்திற்குப் போயிருந்த போது என்னையும் கூட அழைத்துச் சென்றனர். அங்கு ஒரு நாள் ஒரு ஏரிக்கரையோரம் நான் உலாவி விட்டு, சிரமபரிஹாரமாக ஒரு செடியின் நிழலில் உட்கார்ந்தேன். ஆங்கிலத்தில் அச்செடிக்கு செர்ரிட்ரீ (Cherry tree) என்று பெயர்; அது சுமார் 6 அடி உயரமிருந்தது. எனக்குக் கொஞ்சம் இளைப்பாயிருக்க, அச்செடியின் பழங்களை ஒன்றொன்று யெடுத்துத் தின்றுகொண்டிருந்தேன். அச்சமயம் ஏரியின் எதிர்புறமாக ஒரு கலை

மானனது தண்ணீர் குடிக்க வந்து, கொட கொட என்கிற சப்தத்துடன் தண்ணீர் குடிக்க ஆரம்பித்தது. அம்மானனது மிகவும் அழகிய இரண்டு கொம்புகள் உடையதாயிருந்தது. ராணியாருடைய தோட்டத்தில் அதைப் பிடித்துவைத்து வளர்த்தால் அழகாயிருக்குமே யென்று யோசித்தவனாய், ஒரு யுக்தி செய்து, அதைக் கொல்லாமல் பிடிக்க வேண்டு மென்னும் எண்ண முடையவனாய், நான் சாப்பிட்டுக் கொண்டிருந்த செர்ரி பழத்தின் கொட்டை யொன்றை அதன் மண்டைக்கு நேராக வீசி எறிந்தேன். இப்படிச் செய்ததில் என் அபிப்பிராயம் என்ன வென்றால், அக்கொட்டை அதன் மண்டையில் தாக்கி அம்மான் மூர்ச்சையான உடனே அதைப் பிடித்துக்கொண்டு போகலாம் என்பதே. நான் எறிந்த அக்கொட்டையானது மானின் மண்டையில் சரியாகத் தாக்கிய போதிலும், மான் கீழே விழுந்து மூர்ச்சையாகாமல் வெருண்டு ஓடிப்போய் விட்டது. நமது எண்ணம் கைகூடவில்லையே என்கிற விசனத்துடன் நான் அன்று ராணியாரின் அரண்மனையைப் போய்ச் சேர்ந்தேன். காரியம் நிறைவேறாதபடியால் இதைப் பற்றி ராணியாரிடம் நான் ஒன்றும் சொல்லவில்லை.

பிறகு பல வருஷங்கள் கழிந்தன. விக்டோரியா மகாராணியார்களும் காலகதியடைந்தனர். பிறகு பட்டத்துக்கு வந்த ஏழாவது எட்வர்ட் சக்ரவர்த்தியவர்கள், இங்கிலாந்துக்குப் போயிருந்த யென்னை தன்னுடன் ஸ்காட்லாந்துக்கு ஒரு முறை அழைத்துச் சென்றனர். இச்சமயம் ஸ்காட்லாந்திலுள்ள உயர்ந்த மலைப் பிரதேசங்களில் மான் வேட்டையாட என்னைத் தன்னுடன் அழைத்துச் சென்றார். நாங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு புறமாய்ப் பிரிந்து சென்றோம்; நான் இரண்டு மூன்று மான்களைச் சுட்ட பிறகு, அவைகளின் பின்னாக மலைப்பிரதேசங்களில் ஓடிச்சென்ற இளைப்பினால் ஒரு கற்பாறையின் மீது சற்று படுத்தேன். உடனே நான் உறங்கி விட்டிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். கொஞ்சம் நாழிகைக்கெல்லாம் கண்விழித்து எழுந்திருக்க, சாயங்காலமாய் விட்டது. என்னைக்காணோமே யென்று எங்கு அரசர் தேடுகிறாரோ என்று அஞ்சினவனாய், எழுந்திருந்து அவரிருக்குமிடத்தைக் கண்டுபிடித்து இருட்டுமுன் அவர் பக்கம் போய்ச்சேர வேண்டுமென்று ஆவல்

கொண்டவனாய், நான்கு புறமும் சுற்றிப்பார்த்துவிட்டு அக்கற்பாறையின் கீழே நோக்க, என் கண்ணுக்கு ஒரு மிகவும் ஆச்சரியமான காட்சி தென்பட்டது. அங்கிருந்த எல்லாச் செடிகளும் அசைவற்றிருக்க, ஒரு செடி மாத்திரம் இங்கும் அங்குமாக உலாவிக் கொண்டிருந்தது! இதென்னடா இது! இச்செடி எப்படி நடக்கிறது என்று யோசித்தவனாய், அது என்ன செடியென்று உற்று நோக்க, அது ஒரு செர்ரி செடியாயிருந்தது! அக் கற் பாறையின் அருகில் அச்செடி நடந்து வர, மெல்ல மேலேயிருந்த நான் அச் செடியிலிருந்த ஒரு செர்ரிப் பழத்தைப் பறித்து தின்றேன். உடனே நான் பலவருடங்களுக்கு முன் இத் தேசத்தில் சாப்பிட்ட செர்ரி பழத்தின் சுவையைப் போலவேயிருக்க, அந்த பழய ஞாபகம் எல்லாம் எனக்கு வந்தது. உடனே இச்செடி எப்படி நடக்கிறது என்று அறியவேண்டி அதன் மூலத்தைப்பார்க்க, அச்செடி ஒரு கிளைமானின் தலையில் முளைத்திருந்ததைக் கண்டேன்! அப்பொழுது அச்செடி நடந்து கொண்டிருந்த காரணத்தை அறிந்தேன்! முன்பு நான் அம்மானைப் பிடிக்க எறிந்த செர்ரிக் கொட்டையானது அம்மானின் மண்டையில் தங்கவே, பிறகு அக் கொட்டை அங்கு வேரூன்றி செடியாக முளைத்து, நாளடைவில் பெரிய மரமாகி விட்டது. உடனே நான் நின்று கொண்டிருந்த கற்பாறையைச் சுற்றிக்கொண்டிருந்த அம்மான், மறுமுறை என் கைக் கெட்டிய தூரம் வந்த பொழுது அம்மரத்தின் கிளையொன்றைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அதன் மூலமாக இறங்கி அம்மானின் பெரிய முதுகில் குதிரையின் மீது உட்காருவது போல் உட்கார்ந்து கொண்டேன். உடனே அம்மானை பயப்படவேண்டாமென்று தட்டிக்கொடுத்து, மான் பாஷையில் அரசரது வின்ட்சர் (Windsor Park) பார்க்கில் வைத்து நன்றாகப் போஷிப்பதாக வாக்களித்து, அதன் இரண்டு கொம்புகளையும் இரண்டு கைகளினால் பிடித்துக்கொண்டு, அதை அரசரிருக்கு மிடம் மெல்ல நடத்திக்கொண்டு போனேன். அங்கிருந்தவர்களெல்லாம் (அரசர் உட்பட) ஒரு மானின் தலை மீது பத்தடி உயரமிருக்கும் ஒரு மரம் முளைத்திருப்பதையும், அம்மானின் முதுகின் மீது நான் சவாரி செய்துகொண்டு வருவதையும் கண்டு மிகவும் ஆச்சரியப்

பட்டனர். பிறகு அரசரிடம் நடந்த விர்த்தாந்தத்தையெல்லாம் கூறி, விக்டோரியா மஹாராணிக்குக் காணிக்கையாக நான் எண்ணியிருந்த அம்மானை, அவர்களுடைய மகனாகிய எட்வர்ட் அரசர் பெறும்படியாக வேண்டினேன். அவரும் அதைச் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டார் அம்மான் பல வருஷகாலம் அரசரது தோட்டமாகிய விண்ட்சர் (Windsor) பார்க்கில் இருந்தது. போன வருஷம்தான் அம்மான் வயோதிகம் மேலிட்டு மறித்ததாகவும் அதை அப்பார்க்கின் ஒரு புறம் புதைத்து விட்டதாகவும் எனக்கு சேதி வந்தது. அச் செர்ரி விருட்சத்தை அந்தத் தோட்டத்திலேயே ஒரு பக்கம் நட்டு வைத்திருக்கிறார்களாம்.

இதை கேட்டும் இங்கிருக்கும் நண்பர்கள் இக்கதையைப் பற்றி ஏதாகிலும் சந்தேகப்பட்டால், என்றைக்கு வேண்டுமென்றாலும் என்னை இங்கிலாந்துக்கு அழைத்துச் சென்றால் அங்கு விண்ட்சர் பார்க்கில் இருக்கும் அந்த செர்ரி விருட்சத்தை நான் காண்பிக்கிறேன்.

---

## ஐந்தாவது கதை

# நான் ஒரு அரசனான கதை.

---

இந்தியா தேசத்தின் கீழாக உள்ள சமுத்திரத்தில் லட்ச தீவுகள் என்று அநேகம் தீவுகள் இருக்கின்றன. அவைகளைப் பார்க்க வேண்டுமென்னும் அவா எனக்கு நெடுநாளாக இருந்தது. அத்தீவுகளைச்சுற்றிலும் அடிக்கடி பெரும் புயல்காற்றுகள் அடிப்பதனால் சாதாரணமாக மாலுமிகள் கூட அவைகளின் அருகில் நெருங்குவதில்லை. ஆகவே நான் அநேகம் மாலுமிகளைத் தங்கள் கப்பலில் என்னை அங்கு கொண்டு போகும்படி வேண்டியும், அப்புயல் காற்றுகளுக்கு அஞ்சி அவர்கள் முடியாதென்று சொல்லிவிட்டார்கள். அதன் மீது இதற்கு நாம் என்ன செய்வது, என்று நான் சிந்தித்துக் கொண்டிருக் கையில், அகஸ்மாத்தாய் நான் அங்கு போய்ச் சேரும்படி நேரிட்டது; அதன் விவரத்தை உங்களுக்குத் தெரிவிக்கிறேன், ஒரு சமயம் லங்கைக்குப் போயிருந்த பொழுது அங்கு நீவரா

ஆலயம் என்னும் மலைமீதுள்ள என் பங்களாவின் உப்பரிகையில் ஒரு நாள் நான் வேடிக்கையாக 'டப்பூஸ்' என்னும் பெரிய காற்றாடியை விட்டுக் கொண்டிருந்தேன். டப்பூஸ் என்பது ஒரு பெரிய காற்றாடியாம். சில சமயங்களில் அதன் வாலில் கழுதைகளைக் கூட கட்டிவிடுவது வழக்கமுண்டு. அதற்காக அதைவிடும் நூலானது மிகவும் பருமனுடையதாயிருக்கும். அப்படிப் பட்ட டப்பூசை நான் விட்டுக் கொண்டிருந்த பொழுது, வெகு தூரத்தில் ஆகாயத்தில் அக்காற்றாடியை விட்டு விட்டு, என்னுடைய நூலெல்லாம் போக, அதன் முகனையைமாத்திரம் இரண்டு கைகளாலும் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருந்தேன். உடனே திடீரென்று ஒரு பெருங் காற்று புறப்பட, அப்படியே வேகமாய் உயர்ந்த என் காற்றாடியின் பின்னால் அதன் கயிற்றைப் பிடித்துக் கொண்டிருந்த நானும் கிளம்பிவிட்டேன்! பிறகு என்ன செய்வது? கயிற்றைப் பிடித்திருந்த கையை விட்டால் நான் கீழே விழுந்து இறக்க வேண்டியதுதான். எங்குதான் போகிறதோ பார்ப்போம், ஸ்வாமியிருக்கிறார், என்று கயிற்றைவிடாமல் அக்காற்றாடியுடன் ஆகாயத்தில் நானும் பறந்து சென்றேன். அநேகம் மயில் இவ்வாறு பறந்து போனபின், காற்று கொஞ்சம் பட்டாக, என் காற்றாடி கீழே இறங்க ஆரம்பித்தது; எங்கு நாம் சமுத்திரத்தில் விழுந்து விடுகிறோமோ என்று பயந்தேன்; தெய்வாதீனத்தால் ஒரு தீவில் என்னை மெல்ல இறக்க ஆரம்பித்தது. கீழே இறங்கும் பொழுது நான் கவனித்துப் பார்த்தேன். ஒரு அரசரது உத்யானவனம் போலிருந்தது. நடுவில் ஒரு பெரிய மாளிகை இருந்தது. சுற்றிலும் ஆயிரக்கணக்கான உயர்ந்த பெரிய விருட்சங்கள் இருந்தன. அவைகளில் ஒன்றின் நுனியில் நான் இறக்கப்பட்டேன். நான் உடனே, மறுபடியும் ஏதாவது காற்றடித்தால், எங்கு மறுபடியும் காற்றாடியின் வாலில் சிக்கிக் கொண்டு பறக்க வேண்டுமோ என்று பயந்து, காற்றாடிக் கயிற்றை விட்டு விட்டேன். அம்மரத்தின் உச்சியில் நின்று நான்கு பக்கமும் சுற்றிப்பார்த்தேன். மிகவும் அழகான தோட்டமாயிருந்தது. ஒரு பெரிய மனிதர் (அவர் அத்தீவின் அரசரென்று பிறகு நான் கண்டேன்) நானிருந்த மரத்தின் கீழ் உலாவிக் கொண்டிருந்தார். அவருடன் பேசலாமென்று வாய்திறக்கு முன், மறுபடியும்

பெரும் புயற்காற்று ஒன்று எழ, நான் இறங்கியிருந்த மரமும் அதன் சுற்றிலுமுள்ள மரங்களும் ஆகாயத்தில் கிளம்பிவிட்டன! இதில் ஒரு வேடிக்கை யென்ன வென்றால் இப்புயற் காற்றானது கீழிருந்து மேலே அடித்தபடியால் இம்மரங்களெல்லாம் நேராக மேலே ஆகாயத்தில் சுழன்று கொண்டே போயின! இவ்வளவு கஷ்டமும், அகப்பையிலிருந்து அக்கினியில் விழுந்தது போலாயிற் றே, என்று பயந்தவனாய் என் கண்களை மூடிக்கொண்டேன். எத்தனை நேரம் இம்மாதிரி அச்சுழற் காற்றினால் நான் உயரப் பறந்தேனோ எனக்குத் தெரியாது. திடீரென்று ஆரம்பித்த காற்று, திடீரென்று நின்று போகவே, நானேறியிருந்த மரமும் மற்ற மரங்களும் கீழே இறங்க ஆரம்பித்தன. இதில் ஆச்சரியமென்ன வென்றால், எல்லா மரங்களும் தங்கள் தங்கள் வேர்கள் ஊன்றி யிருந்த பெரும் பள்ளங் களுக்கு நேராக இறங்கி அவைகளிற் போய்ச் சேர்ந்தன; நான் ஏறியிருந்த மரம்மாத்திரம் (நான் அதன் மீது ஏறி யிருந்த கார ணத்தினால் என்று நினைக்கிறேன்) ஒரு புறமாகச் சாய்ந்து அதன் பள்ளத்தில் விழாது ஒரு பக்கமாக விழஆரம்பித்தது; அப்படி விழும் போது, அங்கு உலாவிக் கொண்டிருந்த அத்தீவின் அரசரது தலை யில் விழ, அவர் பாபம்! மண்டையுடைந்து மாண்டனர்! இதை நான் பிறகு தான் அறிந்தேன். மரம் பூமியில் விழுந்த வேகத்தினால் என் மூளை கலங்கி மூர்ச்சையானேன். எத்தனை நாழிகை அம் மாதிரியாக மூர்ச்சையாயிருந்தேன் என்று என்னால் சொல்ல முடியாது. பிறகு நான் பிரக்ஞை அடைந்து கண் விழித்துப் பார்க்க, என்னை ஒரு பொன்மயமான கட்டிலின் மீது வளர்த்தி யிருக்கக் கண்டேன்! என்னைச் சுற்றிலும் அத்தேசத்து மந்திரிகள் முதலா னோர் சூழ்ந்திருந்தனர். என்ன வென்று விசாரித்ததில், நான் ஏறி யிருந்த மரம் விழுந்ததினால் அத்தேசத்து அரசர் மடிந்ததாகவும், அந்த மன்னர் மிகவும் கொடுங்கோல் அரசனா யிருந்தபடியால் அவர் மடிந்ததற்காக அவர்களெல்லாம் மிகவும் சந்தோஷப் படுவ தாகவும், அந்த அரசர்க்கு ஆண் சந்ததி யில்லாதபடியால், அவருக்கு பதிலாக என்னை அத்தீவுக்கு அரசனாக அவர்களெல்லாம் நியமித்ததாகவும் எனக்குத் தெரிவித்தனர்! நான் என்ன செய்வது? இதுவும் நம்முடைய அதிர்ஷ்டம் தான் என்று

எண்ணியவனாய் அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி அத்தீவில் சில காலம் அரசனாக ஆண்டுகொண்டிருந்தேன். ஆயினும் அவ்வாழ்வு எனக்குப் பிடிக்கவில்லை; எப்படியாவது சீக்கிரம் அத்தீவை விட்டு என் சொந்த தேசம் போக வேண்டுமென்னும் எண்ணம் என்னை எப்பொழுதும் பாதித்துக் கொண்டிருந்தது; இதற்கு ஒரு முக்கிய காரணம், அத்தீவின் வழக்கப்படி இறந்த மன்னரது மனைவியரெல்லாம், என் மனைவிகளானதேயாம்.

எப்படி அத்தீவினின்றும் தப்பி மறுபடியும் இந்தியா தேசமாகிய நமது நாட்டை வந்து சேர்ந்தேன் என்கிற கதையை இன்னொரு சமயம் உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.



## ஆறுவது கதை

# கோனையைக் குதிரையாக்கிய கதை



ருஷ்யாதேசத்து அரசரது குமாரத்தியின் விவாகத்திற்காக என்னை ஒரு முறை அத்தேசத்திற்கு வரும்படி எழுதியிருந்தார். அச்சமயம் பொலாண்டு தேசத்தின் வழியாக ரெயிலில் நான் அரசரது ராஜதானிக்குப் போகும்போது, வழியில் பனி அதிகமாக, ரெயில் பாதையெல்லாம் பனிக்கட்டிகளால் மூடப்பட்டிருந்தபடியால், நான் ரெயிலை விட்டிறங்கி, அத்தேசத்தில் பனிகாலத்தில் ஜனங்கள் சாதாரணமாகச் செல்லும் ஸ்லெட்ஜ் (Sledge) என்னும் ஒருவித வண்டியில் ஏறிச்சென்றேன். அது சக்கரமில்லாத வண்டி; குதிரை கட்டி யிழுப்பது; மறுநாள் கலியாணமாகையால் அதற்குள் எப்படியும் மாஸ்கோ (Moscow) பட்டணம் போய்ச் சேரவேண்டுமென்று அதிவேகமாய்க் குதிரையைத் துரத்திக்கொண்டு போனேன். சாயங்காலம் வழியில் ஒரு பட்டணத்தில் ஒரு சத்திரத்தில் (Inn) தங்கி போஜனம் கொண்டு புறப்படும் சமயத்தில், அச்சத்திரக்காரன் நான் மாஸ்கோவுக்குப் போவதையறிந்தவனாய், "இன்றிரவு போக வேண்டாம், நாளை காலை புறப்பட்டுப் போங்கள்" என்று தடுத்தான். அதற்குக் காரணம் நான் கேட்க, "வழியில் ஒரு பெருங் காடொன்று

இருக்கிறது, அதில் சில தினங்களாக ஒரு பெரிய கோரு யொன்று வழிப்போக்கர்களை யெல்லாம் கஷ்டப்படுத்திக் கொண்டிருக்கிறது. உங்களுக்கும் ஏதாவது அதனால் அபாயம் நேரிட்டாலும் நேரிடும்" என்று சொன்னான். "இந்த கோனாய்களுக் கெல்லாம் நான் பயப்படு பவனில்லை; நான் எப்படியும் நாளை காலை ராஜ குமாரியின் கலியாணத் திற்குப் போய்ச் சேரவேண்டு மென்று சொல்லிவிட்டு, உடனே இரவையும் பாராது என் ஸ்லெட்ஜ் வண்டியில் புறப்பட்டேன். அதிக வேகமாய்க் குதிரையைச் சவுக்கினால் அடித்துக் கொண்டு போகும் பொழுது, சத்திரக்காரன் குறிப்பிட்ட காடு வந்து சேர்ந் தது; நான்கு புறமும் சுற்றிப் பார்த்தேன்—ஒரு கோனாயை யும் காணோம். சத்திரக்காரன் அக்கோனாய் சற்றேறக்குறைய ஒரு குதிரையின் பெருமனிருக்கும் என்று சொல்லியிருந்தான்; அவ் வளவு பெரியதா யிருந்தால் நமது கண்ணுக்குப் புலப்படாமற் போகாது என்று தீர்மானித்தவனாய், வேகமாய் என் வண்டியைச் செலுத்திக் கொண்டு போனேன். கொஞ்ச நேரத்திற் கெல்லாம் என் பின்னால் ஒரு பெரும் சப்தங் கேட்டது; என்னவென்று திரும்பிப் பார்த்தால், அக்கோனாய் என்னை பின்பற்றி ஓடிவருவதைக் கண்டேன்! அதனின்றும் தப்ப என் குதிரையை அதிகவேகமாய்ச் செலுத்தியும் அக்கோனாய் என் குதிரையைவிட சிறிது பெரியதா யிருந்த படியால் என் குதிரையைவிட வேகமாய் ஓடிவந்தது; வரவர அது எனக்கு அருகில் வருவதை அதன் காலடிச் சப்தத்தினால் கண் டேன். அதனுடன் சண்டை போட்டு நம்மால் வெல்லுவது அசாத் தியம் என்று அறிந்தவனாய், அது மிகவும் கிட்ட வந்தவுடன் என் ஸ்லெட்ஜ் வண்டியில் ,வருவதுவரட்டும் என்று குப்புறப்படுத்துக்கொ ண்டேன். உடனே நான் நினைத்தபடியே ஆயிற்று ; என் பின்னால் ஓடி வந்த கோனாய் வேகமாய்ப் பாய்ந்து என்னைத் தாண்டி என் குதிரையின் பின்பக்கத்தைப் பற்றிக் கொண்டது. உடனே அதை அவசரமாகத் தின்ன ஆரம்பித்தது! கோனாய் பின் பக்கம் கடிக்க ஆரம்பிக்கவே என் ஸ்லெட்ஜ் வண்டியிலிருந்த குதிரை நோய் பொறுக்க முடியாமல் இன்னும் அதிக வேகமாய்ப் பறக்க ஆரம்பித்தது. சிறிது நேரத் திற்கெல்லாம் அக்கோனாய் குதிரையின் உடலை எல்லாம் தின்றுவிட, மிகுதியாயிருந்த குதிரையின் தோல் மாத்திரம் அப்படியே பாம்பின் சட்டை பிரிவது போல் பிரிந்து கீழே விழுந்து விட்டது.

இதன் பலனாக அக்குதிரையின் கடிவாளம் முதலிய ஆர்னெஸ் (harness) கோனாயின் உடலில் மாட்டிக் கொண்டது! இதுதான் சமயம் என்று, நான் எழுந்து உட்கார்ந்து என் ஜாட்டியினால் கோனாயை, குதிரையை யடிப்பது போல் அடித்தேன். உடனே கோனாய் ஏதோ பிசாசு நம்மை அடிக்கிறது என்று பயந்ததாய் காற்று வேகமாய்ப் பறக்க ஆரம்பித்தது! இப்படியே கொடுங் கோனாய் பூட்டிய என் ஸ்லெட்ஜ் வண்டியை ஓட்டிக் கொண்டு மாஸ் கோ நகரத்தின் அரசர் அரண்மனையைப் போய்ச் சேர்ந்தேன். மற்ற கனவான்களெல்லாம் குதிரைகள் பூட்டிய வண்டியில் அங்கு விஜயம் செய்ய, நான் கோனாய் பூட்டிய வண்டியில் வந்து சேர்ந்ததைக்கண்டு, அரசர் உட்பட அங்கிருந்தவர்களெல்லாம், மிகவும் ஆச்சரியப் பட்டனர். நான் அரண்மனையின் முற்றம் போய்ச் சேர்ந்ததும், என் வண்டியை இழுத்துக் கொண்டு வந்த அக்கொடிய கோனாய், குதிரையைத் தின்றதினாலோ, அல்லது அத்தனை மயில் என் ஸ் லெட்ஜ் வண்டியை இழுத்து வந்ததினாலோ, அல்லது என் சவுக்கடி பொறுக்க முடியாததினாலோ, கீழே விழுந்து இறந்தது. உடனே எல்லோரும் இந்த ஆச்சரியகரமான கோனாயைப் பார்க்க அருகில் நெருங்கினார்கள். அப்பொழுது அரசரது தளகர்த்தர் ஒருவர் "ஓ! இதுதான் அக்காட்டில் பிரயாணிகளை யெல்லாம் இன்னற் படுத்திக் கொண்டிருந்த கொடுங் கோனாய்!" என்று தெரிவித்தார். அன்றியும் அதைக் கொல்பவர்களுக்கு அளிப்பதாக பறையறை வித்திருந்த பரிசை எனக்குக் கொடுக்க வேண்டுமென்று அரச ருக்கு தெரிவித்தார். அரசரும் அத்தொகையை எனக்குப் பரிசாக அளிக்க வர, நான் வேண்டாமென்று தடுத்து, அதை ராஜ குமாரிக்கு கலியாணப் பரிசாகக் கொடுக்கும்படி வேண்டினேன். அதன் மீது அரசர் அகமகிழ்ந்து "ஓனாயை ஓட்டிய ஒப்பில்லா வீரன்" என்னும் அர்த்தமுடைய ருஷ்யா பாஷையில் எனக்கு ஒரு பட்டப் பெயர் அளித்தார். இக்கதையை பற்றி யாராவது சந்தேகப் படுவதானால், உடனே ருஷ்யா தேசத்து அரசரிடம் போய் கேட்டுக் கொள்ளலாம், அவ்வரசர் இது பொய் என்று தெரிவித்தால் இனி மேல் நான் ஒரு கதையையும் சொல்வதில்லை என்று பிரமாணம் செய்கிறேன். (குறிப்பு: ருஷ்யா தேசத்து அரசர் இறந்து இருபது வருஷங்களுக்கு மேலாகிறது. இப்பொழுது அவரது மேல் விலாசம் எனக்குச் சரி யாக தெரியாது).

## ஏழாவது கதை

# நான் சந்திர மண்டலம் போன கதை



நேற்றைத் தினம் எனது பிரயாணங்களில் ஒரு கதையைச் சொல்லி முடித்தவுடன், உங்களில் ஒருவர் (அவர் பெயரை இங்கு சொல்ல எனக்கு இஷ்டமில்லை) "இதுவரையில் நீங்கள் கூறிய பிரயாணக் கதைகளை மிகவும் உன்னிப்பாய்க் கேட்டுக் கொண்டு வந்தேன். அவைகளை ஆராய்ந்து பார்க்கும்பொழுது, அவைகளெல்லாம் உண்மையானால் உங்களுக்கு நூறு வருடங்களுக்கு மேல் வயதாயிருக்க வேண்டுமே, உங்களைப் பார்த்தால் முப்பத்திரண்டு வயது வாலிபனாகத் தோன்றுகிறீர்களே, இதற்கென்ன சமாதானம் சொல்லுகிறீர்கள்?" என்று ரகசியமாய்க் கேட்டார், அப்பொழுது நான் "இதில் ஒன்றும் ரகசியமில்லை இதற்குக் காரணத்தை நான், நாளை கதையில் வெளிப்படுத்துகிறேன்" என்று பதில் உரைத்தேன்.

ஆகவே இன்றைத்தினம் நான் அநேகம் ஆயிரம் வயதுடையவனாயினும், என்றும் இளமை மாறாதிருப்பதின் காரணத்தை, உங்களுக்கு நான் சந்திர மண்டலம் சென்று அங்கிருக்கும் அமிர்தத்தைப் பானம் செய்து இவ்விளமையைப் பெற்ற உண்மையான கதையை, சொல்லுகிறேன் கேளுங்கள்.

அநேகம் ஆயிரம் வருடங்களுக்கு முன்பாக (நான் இதற்குக் கணக்கு வைக்காதது என் பேரில் தவறு தான்) நான் இமயமலைக்குப் போயிருந்தேன். அங்கே பிரம்மகபாலம் என்னும் ஓர் இடத்தில் ஒரு சித்தரைக் கண்டு நான் அவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தேன். அவர் ஒரு நாள் என்னுடைய சுஸ்ரூஷைக்கு மெச்சி உனக்கு என்ன வரம் வேண்டுமென்று கேட்டார். "ஸ்வாமி, நான் அமிர்தபானம் செய்து, தேவர்களைப் போல் என்றும் மாறாத இளமை யுடையவனா யிருக்க விரும்புகிறேன்" என்று சொன்னேன். ஆனால் சந்திரனிடத்தில் அமிர்தம் கிடைக்கும் அங்கு போய் அதைச் சாப்பிட்டுவா என்றார். நான் சந்திர மண்டலத்திற்கு எப்படிப் போவது என்று திகைத்து நிற்க, அவர்

அங்கு அருகாமையில் இமயமலையில் முளைத்திருந்த ஒரு செடியின் வித்தை எடுத்து, அதை ஏதோ ஒரு மூலிகையின் ரசத்தில் தோய்த்து, என் கையில் கொடுத்து, ஓரிடத்தைக் காண்பித்து, "இங்கு இதை நட்டு தினம் இந்தமானசசரசலிருக்கும் தண்ணீரைக் கொண்டு வந்து ஒரு குடம் வார்த்துக் கெண்டுவா, முதல் நாள் ஒரு அடி உயரம் செடி வளரும், இரண்டாவது நாள் இரண்டு அடி வளரும் மூன்றும் நாள் நான்கு அடி வளரும், இப்படியே நாளுக்கு நாள் இரட்டிப்பாக வளரும், சீக்கிரத்தில் அச்செடி சந்திரமண்டலத்தை எட்டும், பிறகு நீ அச்செடியின் மீதேறி சந்திரமண்டலம் போய்ச் சேரலாம்" என்று கூறினர் நான் அவ்வாறே அவ்வித்தை நட்டு, தண்ணீர் வார்த்துக் கொண்டு வர, சில தினங்களுக்கெல்லாம் அச் செடி சந்திர மண்டலத்தைக் கிட்டியதைக்கண்டு சந்தோஷித்து, அதன் மீதேறி சந்திர மண்டலத்தை யடைந்தேன்.

அங்குபோன பிறகு அமிர்தம் இருக்குமிடத்தை அறியாது இங்கும் அங்கும் நான் சுற்றிக் கொண்டிருக்க, அங்கிருந்த ஒரு மஹான் என் மீது பச்சாத்தாபங் கொண்டு அது இருக்கு மிடத்தை எனக்குக் காண்பித்து அதில் கொஞ்சம் சாப்பிடும்படி செய்தார். ஆனல் அப்படிச் செய்யு முன் சந்திரமண்டலத்தி லுள்ள இரகசியங்கள் ஒன்றையும் நான் பூமண்டலத்தில் ஒருவருக் கும் சொல்லக் கூடாது என்று என்னிடம் சத்தியம் வாங்கிக் கொண்டார். ஆகவே அங்கு நான் கண்ட அநேக அற்புதங்களைப் பற்றி உங்களுக்கு நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. அந்த அமிர்தத் தை நான் சாப்பிட்ட பொழுது, எனக்கு வயது முப்பத்திரண்டு; அது முதல் இதுவரைக்கும், அதன்பலனுக, நான் முப்பத்திரண்டு வயதிலேயே யிருக்கிறேன்.

நான் சந்திர மண்டலத்திலிருந்து எப்படி பூமிக்கு திரும்பி வந்தேன் என்று நீங்கள் அறிய விரும்புவீர்கள் என்று நினைக்கி றேன். உங்களில் பெரும் பாலர், நான் ஏறிப் போன செடியின் வழியாகத் திரும்பி வந்திருக்க வேண்டும் என்று நினைப்பீர்கள்; அப்படி செய்யவில்லை நான். ஏனென்றால், நான் சந்திர மண்டலத் துக்கு போனதும், அதுவளர்ந்த வனத்தில் அச்செடிக்கு மானச சரசின் தண்ணீரை வார்க்க மறந்து போய் விட்டபடியால், அச்

மெசடி வாடி வதங்கி சுருண்டு போய் விட்டது! சீக்கிரம் பூமண்டலம் திரும்பிப் போக வேண்டுமென்னும் எண்ணம் எனக்குண்டானதும் அச்செடியைப் பார்க்க, அது என் கண்ணுக்கும் புலப்படவில்லை! நான் என்ன செய்வது? எனக்கு அமிர்த மிருக்கும் இடத்தைக் காண்பித்த பெரியவரிடம் போய், என் கஷ்டத்தைத் தெரிவிக்க, அவர் எனக்கு ஒரு பெரிய குடையைக் கொடுத்து, சந்திரனி லுள்ள ஒரு பெரிய மலையின் உச்சியின் மீதேறி, இக்குடையைப் பிடித்துக் கொண்டு பூமியை நோக்கிக் குதிப்பாயாயின், இக்குடை விரிந்து, உன்னை ஒரு அபாயமுமின்றி பூமிக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும், என்று தெரிவித்தார். அவருக்கு வந்தனமளித்து, நமஸ்கா ரம் செய்துவிட்டு, அவர் சொன்னபடியே சந்திரனிடமிருந்த பெரிய மலையின் சிகரத்தின் மீதேறி, அவர் கொடுத்த குடையைப் பிடித்துக் கொண்டு பூமியைக் குறித்து, ஓர் நாள் பௌர்ணமியன்று நான் குதிக்க, குடைவிரித்து சீக்கிரம் பூமியை வந்து சேர்ந்தேன். இந்த ரகசியத்தை மாத்திரம் பூமியிலுள்ளவர்களுக்குத் தெரிவிக்க அந்த மஹானிடம் உத்திரவு பெற்று வந்தமையால், குடையைப் பிடித் துக் கொண்டு உயரத்திலிருந்து கீழே குதிக்கும் விதத்தை, சில ஐரோப்பிய சிநேகிதர்களுக்கு நான் தெரிவிக்க, அதைக் கொண்டு அவர்கள் பாரசூட் (Parachute) என்னும் குடையை அவர்கள் உண்டு பண்ணினார்கள். இதுதான் நான் சந்திரமண்டலத்துக்குப் போய் அங்கிருக்கும் அமிர்தத்தைச் சாப்பிட்டு யௌவனம் மாறா திருப்பதின் ரகசியம்.

இக்கதையைப் பற்றி யாராவது சந்தேகப் பட்டால் நான் உபயோகித்த குடை இன்னும் என்னிடம் இருக்கிறது. அதை வேண்டு மென்றால் இரவலாகத் தருகிறேன். அதை எடுத்துக் கொண்டு இமயமலைக்குப் போய், மவுண்ட் எவரெஸ்ட் (Mount Everest) என்னும் சிகரத்தின் மீதேறி, கீழே குதித்துப் பார்க்க லாம். ஆனால் என் குடைக்கு ஏதாவது சேதம் நேரிட்டால் அதை அவர்கள் சிலவில் மராமத்து செய்து கொடுக்க ஒப்புக்கொள்ள வேண்டும்.

—∘∘∘—

## எட்டாவது கதை

# திமிங்கலத்தின் வயிற்றில் வசித்த கதை



ஒரு முறை நான் ஐரோப்பா கண்டத்திலிருந்த பொழுது, கிரீன்லான்ட் (Green Land) என்னும் தேசத்தைப் பார்க்கப் போனேன். ஒரு நாள் அங்கு கடற்கரையில் நான் ஸ்நானம் செய்து கொண்டிருக்கையில் ஒரு ஆச்சரியகரமான சம்பவம் எனக்கு நேர்ந்தது. எனக்கு நன்றாய் நீந்தத் தெரியுமாதலால் கரையை விட்டு மூன்று மைல் தூரம் வரையில் நீந்திக் கொண்டு போனேன். அவ்விடம் சமுத்திர அலை அதிகமாயில்லாதபடியால் மல்லார்ந்து படுத்துக் கொண்டு சமுத்திரத்தில் விளையாடிக் கொண்டிருந்தேன். திடீரென்று நான் மிதந்து கொண்டிருந்த ஜலமானது என் தலை பக்கமாக வேகமாய் இழுக்கப்பட்டது! இது என்ன ஆச்சரியம் என்று நான் திரும்பிப் பார்க்க, ஒரு பெரிய திமிங்கலமானது தன் வாயைத் திறந்து கொண்டு அருகாமையிலிருந்த கடல் நீரையெல்லாம் தன் அகண்ட வாய்க்குள் இழுத்துக் கொண்டிருந்தது ; உடனே அதன் வாயினின்றும் தப்பிச் செல்ல முடியாதென்று கண்டறிந்தவனாய், அதன் வாயருகில் நான் இழுக்கப் பட்ட பொழுது அதன் பற்கள் படாதபடி வேகமாய் உள்ளே நீந்திச் சென்றேன். அந்த திமிங்கலம் பெரிய திமிங்கலம் என்று முன்பே சொன்னேன். இவ்வளவு பெரியது என்பது அதன் வயிற்றுக்குள் போன பிறகு தான் எனக்கு நன்றாய்த் தெரிந்தது ; அதன் வயிறு மாத்திரம் சென்னையில் விக்டோரியா பப்ளிக்ஹால் என்று ஒரு கட்டடமிருப்பதாக உங்களில் சிலர் கேள்விப் பட்டிருக்கலாம், அவ்வளவு பெரியதாயிருந்தது. உள்ளே என் கண்ணுக்கு எப்படி இது புலப்பட்டது என்று நீங்கள் சந்தேகிக்கலாம். அதற்கு நான் காரணம் சொல்லாவிட்டால், இந்த உண்மையான கதையை நீங்கள் நம்பமாட்டீர்கள். இந்தத் திமிங்கலங்களெல்லாம் அடிக்கடி மூச்சுவிட சமுத்திர மேல் மட்டத்திற்கு வரவேண்டும்; அப்படி வரும் ஒவ்வொரு சமயமும் அது வாயைத் திறந்து (அல்லது மூக்கைத் திறந்து — எதை என்று என்னால் உறுதியாய்ச் சொல்லமுடியாது) மூச்சுவிடவேண்டியிருக்கிறது அப்படிச்

செய்யும் பொழுதெல்லாம் வெளிச்சமானது அதன் வயிற்றுக்குள் பிரவேசிக்கும். அதனால் அங்கு இருந்த பொருள்கள் முதலியவற்றை யெல்லாம் நான்பார்த்து அறிய அனுகூலமாயிருந்தது. இப்படி நான் அடைபட்டிருந்த பொழுது, அன்று காலை ஒன்றும் புசியாதிருந்த படியால், எனக்குப் பசி மிகவும் அதிகமாயிற்று ; உணவிற்கு என்ன செய்வது என்று நான் யோசித்துக் கொண்டிருந்த பொழுது, அங்கு அதன் வயிற்றில் குளம் போலிருந்த அது உட் கொண்ட சமுத்திர ஜலத்தில், ஒரு சிறு படகு மிதந்து கொண்டிருக்கக் கண்டேன். உடனே சந்தோஷத்துடன் அப்படகில்மெல்ல ஏறிக்கொண்டேன். பிறகு மறு முறை உள்ளே வெளிச்சம் முன் சொன்னபடி வந்த பொழுது அப்படகில், என் அதிர்ஷ்ட வசத்தால், அதன் சொந்தக்காரர்கள் வைத்திருந்த பலஹாரப் பெட்டியொன்று கிடைத்தது! அதை உடனே மிகவும் ஆவலுடன் திறந்து அதில் வைத்திருந்த பலஹாரங் களில் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு, அதில் வைத்திருந்த ஒரு ஸ்பிரிட் விளக்கினால் (Spirit Lamp) கொஞ்சம் காப்பி தயார் செய்து சாப்பிட்டேன்! என் பசி யடங்கிய போதிலும், எத்தனை காலம் நாம் இத் திமிங்கலத்தின் வயிற்றிலிருப்பது என்னும் மனக் கவலை எனக்கு அதிகரித்தது. நான் எப்படி இதன் வயிற்றினின் றும் தப்புவது என்று ஆலோசித்துக் கொண்டிருக்கும் சமயத்தில், திடீரென்று திமிங்கலத்தின் முதுகில் ஓர் இடி விழுந்தாற்போல் ஒரு பெரிய சப்தம் கேட்டது. உடனே திமிங்கலமானது இந்தப் பக்கமும் அந்தப்பக்கமும் புரள ஆரம்பித்தது! நான் அதன் வயிற் றிற்குள் இருந்த படகின் இரண்டு பக்கங்களையும் கைகளால் கெட்டி யாகப் பிடித்துக்கொள்ளவேண்டியதாயிற்று. கொஞ்ச நேரத்திற் கெல்லாம் திமிங்கலமானது ஒரு பக்கமாக மிகவும் வேகமாய் இழுக் கப்பட்டதுபோல் எனக்குத் தோன்றிற்று. அது முதல் அது வாயைத் திறக்கவில்லை. அதன் காரணத்தைப் பிறகுதான் அறிந் தேன்; அது வாயைத் திறவாதபடியால், உள்ளே ஒரே இருட்டாய் விட்டது; இதனால், (கொஞ்சம் பயத்தினால் என்று நான் நிஜத் தைக் கூற வேண்டியவனா யிருக்கிறேன்) நான் பிரக்ஞை யற்று மூர்ச்சையானேன். இவ்வாறு எத்தனை காலம் நான் மூர்ச்சையா யிருந்தேனோ எனக்குத்தெரியாது; திடீரென்று என் தலைக்கு நேராக

அத்திமிங்கலத்தின் உடலின் மீது ஏதோ வெட்டுகிற சப்தம் கேட்டது. உடனே நான் கண்விழித்துப் பார்க்க, அச்சப்தம் அதிகரித்து வர வர என் அருகில் வருவது போல் தோன்றியது. கொஞ்ச நேரத்திற் கெல்லாம் என் தலைக்கு நேராக ஒரு புகைக் கூண்டில் மேலே வெளிச்சம் தெரிவது போல் ஒரு வெளிச்சம் தோன்றியது. அன்றியும் ஏதோ மனிதர்கள் பேசுவது போல் சப்தமும் கேட்க ஆரம்பித்தது. நான் உலகத்திலுள்ள எல்லா பாஷைகளையும் பேசக் கற்றுக் கொண்டிருக்கிறேன் என்பதை உங்களுக்கெல்லாம் முன்பே தெரிவித்திருக்கிறேனே, அதனால் அவர்கள் பேசுவது லாப்லாண்ட் (Lapland) பாஷை என்பதை அறிந்தேன். உடனே நான் என் முழுபலத்துடன் அவர்கள் பாஷையில் நான் உள்ளே யிருப்பதைத் தெரிவித்தேன். அவர்கள் என் குரலைக் கேட்டதும் ஏதோ திமிங் கலத்தின் வயிற்றிலிருந்து ஒரு பிசாசு பேசுவதாக நினைத்தார்களாம், இதைப் பிறகு அறிந்தேன். மறுபடியும் நான் இன்னுமொனைத் தெரிவிக்க, அப்பயம் நீங்கினவர்களாய், அத்திமிங்கலத்தின் முதுகைப் பிளந்து வழி செய்து கொண்டு, மேலே யிருந்து ஒரு கயிற்றைவிட, அதை நான் பற்றிக்கொண்டு மேலே போய்ச் சேர்ந்தேன். அப்பொழுது மிகவும் ஆச்சரியகரமாய் அவர்கள், நான் அத்தேசத்தில் யார் வீட்டில் போய் இறங்க விருந்தேனோ, அவர்களே என்பதைக் கண்டு சந்தோஷித்தேன். அவர்களும் மிகவும் சந்தோஷித்தனர். பிறகு அவர்களுக்கு என்னுடைய விர்த்தாந்தத்தை யெல்லாம் சொன்னேன். அவர்களும் அத்திமிங்கலத்தைத் தாங்கள் ஹார்ப்பூன் (Harpoon) என்னும் ஈட்டியாற் குத்தி கரைக்கு இழுத்துக் கொண்டு வந்து, அதைக் கொன்று, அதன் பிளப்பர் (Blubber) என்னும் கொழுப்பிற்காக அதை வெட்டிப் பிளந்த கதையைத் தெரிவித்தனர். இதில் இன்னொரு ஆச்சரியகரமான விஷயம் என்னவென்றால், அதன் உடலை எல்லாம் பிளந்து கொழுப்பை எடுத்த பொழுது, அதன் வயிற்றில் நான் இருந்த கப்பலானது இவர்களுடையதெனக் கண்டறிந்தேன். ஒரு வாரத்திற்கு முன்பாக திமிங்கல வேட்டைக்காக அவர்கள் அப்படகில் ஏறிச்சென்ற பொழுது, அத்திமிங்கலம் அப்படகைத்தன் வாலினால் அடித்துக் கவிழ்த்துவிட்டதாம். உடனே அவர்களெல்லாம் நீந்தித் தப்பித்

துக்கொண்டு போக, அப்படகை அப்படியே விழுங்கிவிட்டதாம். கடைசியாக மற்றொரு அதிசயத்தைக் கூறுகிறேன். அதன் வயிற்றைக் கிழித்துப் பார்த்தபொழுது அதன் வயிற்றின் ஒரு புறம் அபிரேய (Hebrew) பாஷையில் "ஜோனு" (Jonah) என்று எழுதியிருந்தது. இது என்ன என்று அவர்களெல்லாம் ஆச்சரியப்பட்டனர். நான் உடனே என் சிறு வயதில் பைபில் முழுவதும் படித்திருந்தபடியால், இத்திமிங்கலம்தான் முன்னுளில் ஜோனு (Jonah) என்பவரை விழுங்கி இருக்க வேண்டும் (பைபிளில் கூறியபடி); அந்த ஜோனு இதன் வயிற்றில் என்னை போல் இருந்தபொழுது, அங்கிருந்ததற்கு அடையாளமாகத் தன் பெயரை அதன் வயிற்றில் ஒரு புறம் எழுதியிருக்கவேண்டும், என்று தெரிவித்தேன்.

இக்கதையில் யாருக்காவது சந்தேகமிருந்தால் பைபிளில் கூறிய ஜோனு என்பவரைக் கேட்டு சந்தேகம் நிவர்த்தித்துக் கொள்ளலாம்.

---

## ஒன்பதாவது கதை

# சீரங்கக் கோட்டையை நான் பிடித்த கதை

---

1799 ஆம் வருஷம் சீரங்க பட்டணம் நமது ராஜாங்கத்தாரால் பிடிக்கப்பட்டது என்று மாத்திரம் நமது தேசசரித்திரங்கள் கூறுகின்றன. அது எப்படி உண்மையாகப் பிடிக்கப்பட்டது என்கிற ரகசியம் இதுவரையில் யாருக்கும் தெரியாது. அதை உங்களுக்கு இன்று தெரிவிக்கிறேன்.

எப்படியும் ஒரு நாள் இங்கிலீஷ்காரர்களுக்கும் தனக்கும் கடும்போர் விளையும், எப்படியும் அச்சமயம் நமது ராஜதானியை அவர்கள் முற்றுகை போடுவார்கள் என்று யோசித்தவனுய், டிப்பு சுல்தான் சீரங்கப்பட்டணம் கோட்டையை மிக பலப்படுத்தியிருந்தார். அதற்காக ஆயிரக்கணக்கான பேர்களைக் கொல்லத்தக்க

ஒரு பெரிய பீரங்கியையும் தயார் செய்து வைத்திருந்தார். 1799 டிப்பு சுல்தான் நினைத்தபடியே இங்கிலீஷ்காரர்கள் சீரங்கபட்டணத்தை முற்றுகை போட்டனர். அச்சமயம் என் வீரத்தையும் சூட்சும புத்தியையும் அறிந்த இங்கிலீஷ் சேனாதிபதி என்னைத் தன் துணையாக அழைத்துச் சென்றார். இவ்வளவு பலமாகக் கட்டப்பட்ட கோட்டையை நாம் எப்படி பிடிப்பது? என்று ஒருநாள் என்னை யோசனை கேட்டார். அப்பொழுது அக்கோட்டையிலுள்ள ஆயிரம் பெயரை ஒரே விசையில் கொல்லத்தக்க பீரங்கியை முதலில் அழிக்கவேண்டும் என்று அவரிடம் சொல்லி, அன்று காலை நான் என் தூர திருஷ்டியால் பார்த்த பொழுது, அதைச் சுடுவதற்காக ஏற்பாடுகளை எதிரிகள் செய்து கொண்டிருந்ததை அறிந்த நான், ஒரு யுக்தி செய்தேன். எங்களிடமுள்ள பெரிய பீரங்கியொன்றைக் கொண்டுவரச் சொல்லி, அதை எங்கள் பாசறையில் ஒரு பக்கமாக ரகசியமாக சீரங்கபட்டணத்து அற்புதமான பீரங்கிக் கெதிரில் வைத்தேன். பிறகு எதிரிகள் அவர்களுடைய பீரங்கிக்கு மருந்தை கெட்டித்துக்கொண்டிருந்ததை என் தூர திருஷ்டியால் அறிந்து, நேராகக் குறிபார்த்து,என் பீரங்கியை அவர்களது பீரங்கிக் குழாய்க்கு எதிராகச் சுட்டேன். உடனே என் பீரங்கியின் குண்டானது, எதிரிகள் பீரங்கியின் குழாய் வாயில் நுழைந்து, அதில் அடைத்திருந்த மருந்தை வெடிக்கச் செய்தது! உடனே பல வருஷங்களாகத் தயார் செய்து வைத்திருந்த தங்கள் பெரும் பீரங்கி சின்ன பின்னமாய் உடைந்து போகவே, அங்கிருந்த சுல்தானது படைவீரர்களெல்லாம் பயந்து போய் நான்கு பக்கமும் ஓடிப் போய்விட்டனர். இச்செய்தியை யறிந்த சுல்தானும் மிகவும் மனக் கலக்கம் கொண்டிருந்தார். இதுதான் சமயம் என்று நான் ஒரு பக்கிரியைப்போல் வேடம் பூண்டு சீரங்கப்பட்டணத்துக்குள் நுழைந்து, சுல்தானிருக்குமிடம் போய்ச் சேர்ந்தேன். சுல்தானிடம் நான் ஒரு பெரும் ஜோஸ்யன் என்று தெரிவித்தேன். அவர் என்னைப் பரீட்சிப்பதற்காக, "என் மனதில் ஒரு கவலை யிருக்கிறது, இப்பொழுது, அது இன்னதென்று சொல் பார்ப்போம்" என்றார். நான் உடனே, "நீர் பலவருடங்களாகக் கஷ்டப்பட்டு தயாரித்து வைத்திருந்த பீரங்கி அகஸ்மாத்தாய் உடைபட்டதனால் மனக்

கிலேசம் கொண்டிருக்கிறீர்!" என்று தெரிவிக்க, சுல்தான் மிகவும் ஆச்சரியப்பட்டு, என்னிடம் நம்பிக்கையுள்ளவராய், "இவ்வளவு சொன்னவர், அப்பீரங்கி அகஸ்மாத்தாய் எப்படி உடைபட்டது சொல்லும்" என்று என்னைக் கேட்க, அது உடைந்த விதத்தை அறிந்த நான், அதைக் கூறி, அங்கு சுல்தான் பீரங்கியை உடைத்து விட்டு சற்றுதூரத்தில் மண்ணில் புதைந்திருந்த இங்கிலீஷ்காரர்களுடைய குண்டையும் தோண்டி எடுக்கச் செய்து, சுல்தானுக்குக் காண்பித்தேன். அதன் பேரில் நான் ஒரு பெரிய மஹான், எல்லாம் உணர்ந்தவன், என்று எண்ணினவராய், என்னிடம் மிகவும் அன்பு பாராட்டி தன் அரண்மனையிலே இருக்கச் செய்தார். பிறகு சுல்தான் வேண்டுகோளின்படி. கோட்டையைக் காப்பாற்றுவதற்காக ஏதோ மந்திரம் செய்பவன் போல், கோட்டை முழுவதும் சுற்றிவந்து, அங்கு பீரங்கிகள், குண்டுகள் முதலியனவெல்லாம் எங்கே வைக்கப்பட்டிருக்கின்றன என்பதை மெல்ல அறிந்துகொண்டேன். பிறகு அன்றிரவு சுல்தான் சேவகர்களெல்லாம் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது, பெரிய பீரங்கிகளுக்கு வைக்கப்பட்டிருந்த பெரிய குண்டுகளை யெல்லாம் சின்ன பீரங்கிகளிடமும், சின்ன பீரங்கிகளுக்கு வைக்கப்பட்டிருந்த சிறிய குண்டுகளை யெல்லாம் பெரிய பீரங்கிகளிடம் மாற்றிவைத்து விட்டு, அதிகாலையில், எனது நண்பர் இங்கிலீஷ் சேனாதிபதியிடம் நான் ரகசியமாய்ச் சொல்லிவந்தபடி சீரங்கபட்டணம் கோட்டை மதில் சுவரின் பேரில் ஒரு பச்சைக்கொடியை நாட்டினேன். அந்த சிக்னலு (signal)க்காக எதிர்பார்த்திருந்த இங்கிலீஷ் தளகர்த்தர் உடனே தனது சைனியங்களை சீரங்கப்பட்டணக் கோட்டையை எதிர்க்க உத்திரவு கொடுத்தார், உடனே அவர்களும் அப்படியே செய்தனர். இந்த ஆரவாரத்தைக் கேட்ட சுல்தான் சிப்பாய்கள் தங்கள் பீரங்கிகளுக்கு மருந்தை கெட்டித்து குண்டுகள் போட்டுச் சுட ஆரம்பித்தார்கள். பெரிய பீரங்கிகளுக்கெல்லாம் சிறிய குண்டுகளாயிருந்தன! யுத்த காலத்தில் சுல்தான் சிப்பாய்கள் பெரிய பீரங்கிகளுக்கு சின்ன குண்டுகளை போட்டு சுட்டால், குறி எப்படி தாக்கும்? அவைகள் கோணமாணலாய்ப் போயின. சின்ன பீரங்கிகளுக்கு பெரிய குண்டுகளைப் போடுவதென்றால் எப்படி சாத்தியம்?

சின்ன பீரங்கிக் குழாய்களில் பெரிய குண்டுகள் புகாதபடியால், முட்டிக் கொண்டிருந்தனர்! இதற்குள்ளாக இங்கிலீஷ் சைனியமானது கோட்டையைப் பிடித்துவிட்டது!

இதுதான் சீரங்கப்பட்டணக் கோட்டை பகலில் பிடிக்கப் பட்ட ரகசியம். இதனுண்மையை நீங்கள் யாராவது அறிய வேண்டுமென்றிருந்தால், இப்பவும் சீரங்கப்பட்டணத்து இடிந்த கோட்டைக்குப் போய் சில இடங்களில் தோண்டிப் பார்ப்பீர்களாயின் சில பெரிய குண்டுகளும், சில சிறிய குண்டுகளும் கிடைக்கும். இதைவிட இக்கதை உண்மை யென்பதற்கு உங்களுக்கு என்ன அத்தாட்சி வேண்டும்? அன்றியும், இன்றைக்கும் அந்த சுல்தான் சிப்பாய்களை நீங்கள் கேட்பீர்களாயின் "நம்பொ என்ன செய்ரான் சாமி! பெரிய பீரங்கிக்கு சின்ன குண்டு கொடுத்தாங்க, சின்ன பீரங்கிக்கி பெரிய குண்டு கொடுத்தாங்க சாமி!" என்று சொல்லுவார்கள்.

---

## பத்தாவது கதை

# நான் அமெரிக்காவுக்குப் போன கதை

ஒரு முறை அமெரிக்கா தேசத்திலுள்ள யுனைடெட்ஸ்டேட்ஸ் (United States) என்கிற நாட்டின் பிரசிடெண்ட் அவர்கள் என்னுடைய ஆச்சரியகரமான செய்திகளைக் கேள்விப்பட்டு, தன் தேசத்திலுள்ள ஆச்சரியங்களை நான் பார்த்தறிய வேண்டுமென்று என்னை வரவழைத்தார்; அங்கு நான் கண்ட சில அற்புதங்களை இங்கு எனது நண்பர்களுக்குக் கூறுகிறேன்.

நான் அங்கு போயிருந்த சமயம் மழை யில்லாமல் அத்தேசம் மிகவும் கஷ்ட ஸ்திதியிலிருந்து. ஜனங்களுக்கோ குடிக்கத் தண்ணீர் கிடைப்பது கஷ்டமாயிருந்தது; ஆடுமாடுகள் கதியைக் குறித்துக் கேட்க வேண்டியதில்லை. இச்சந்தர்ப்பத்தில் அத்தேசத்து ராணுவக் குதிரை வீரர்கள் தங்கள் குதிரைகளுக்கு பச்சைப் புல் இல்லாமல் மிகவும் கஷ்டப்பட்டார்கள். அவர்களுக்கு நான் ஒரு யுக்தி கற்பித்தேன். அத்தேசத்தில் ஏராளமாயிருந்த

உலர்ந்து போன வைக்கோல் சுமைகளைக் கொண்டுவரச்சொன்னேன். ராணுவ வீரர்களுடைய குதிரைகளுக்கெல்லாம் பச்சை மூக்குக் கண்ணாடிகள் போட்டு அந்த வைக்கோல் சுமைகளுக்கெதிரில் விடச் சொன்னேன். உடனே அக்குதிரைகளெல்லாம் வைக்கோலைப் பச்சையா யிருக்கும் புல் என்று நினைத்து வயிறு நிரம்ப புசிக்க ஆரம்பித்தன! எவருக்கும் தோன்றாத இந்த யுக்திக்காக அத்தேசத்து பிரசிடெண்ட் எனக்கு "வாயில்லா ஜீவன்களுக்கு வைக்கோல் வழங்கியவன்" என்கிற பட்டப்பெயர் அளித்தார். அன்றியும் அத்தேசத்திலுள்ள ஆச்சரியகரமான விஷயங்களையெல்லாம் தடையின்றிப் பார்வையிடும்படி உத்திரவு கொடுத்தார். அதனுள் ஒன்றை உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

ஒரு நாள், தினத்திற்கு லட்சக்கணக்கான காலில் போட்டுக் கொள்ளும் பூட்ஸ் (Boots) செய்யும் இடத்திற்கு, என்னை அழைத்துக்கொண்டு போய்க்காட்டினார்கள். அங்கு நான் கண்ட அதிசயத்தை என்னென்று சொல்வேன்! அறை மயில் நீளமுள்ள ஒரு மெஷின் (Machine) அங்கிருக்கிறது. அதன் ஒரு புறம் ஆயிரக்கணக்கான ஆடு, மாடு, கன்றுகுட்டி, முதலிய மிருகங்கள் இருக்கின்றன; பூட்ஸ் வேண்டியவர்கள் அம்மிருகங்களில் எந்த மிருகத்தின் தோலினால் தங்களுக்கு பூட்ஸ் வேண்டுமோ, அம்மிருகத்தைக் குறிப்பிடவேண்டியது தான் சரி; உடனே இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் அம்மிருகத்தின் தோலினால் செய்த ஒரு ஜதை பூட்சை அவனுக்குப் புதிதாய் செய்து கொடுத்து விடுகிறார்கள்! அதற்கு ஒரு உதாரணம் கொடுக்கிறேன். ஒரு பசுவின் கன்று குட்டியின் தோலினால் ஒரு ஜதை பூட்ஸ் தனக்கு வேண்டுமென்று ஒருவர் தெரிவித்தால், உடனே அம் மெஷினின் ஒரு வாய்க்குள் ஒரு கன்றுக் குட்டியைப் பிடித்து விடுகிறார்கள். மெஷினைத் திருப்பியவுடன் 2 நிமிஷத்திற்கெல்லாம் அந்த மெஷின் கன்றுக்குட்டியின் தோலை உரித்து, பதப்படுத்தி, சரியாக அளவுபடி அறுத்து, அத்தோலினால் ஒரு ஜதை பூட்ஸ் செய்து, மறு பக்கம் வாயிலில் கொடுத்து விடுகிறது! உடனே அதை வேண்டியவன் அதைக்காலில் போட்டுப் பார்க்கிறான்; சரியாக இருந்தால் எடுத்துக்கொண்டு வீடுபோய்ச் சேர்கிறான். காலுக்கு சரியாயில்லை வேண்டாமென்று திருப்பி விட்டால், உடனே அந்த

ஜதை பூட்சை அந்த மெஷினின் பின்புற வாய்வழியாக அதற்குள் போட்டு, மெஷினை திருப்பிவிடுகிறார்கள். இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் மெஷினின் முன் வாய்வழியாக அந்தக் கன்றுக்குட்டி உயிரோடு வந்து விடுகிறது!



## பதினோராவது கதை

# ஆயிரம் சிங்கங்களை அரை நொடியில் சுட்ட கதை



ஆப்பிரிக்கா கண்டத்தில் ஒரு முறை நான் ஆயிரக்கணக்கான சிங்கங்களை ஒரே குண்டில் கொன்றதை உங்களுக்கு நான் இது வரையிற் சொல்லவில்லையே ? சொல்லுகிறேன் கேளுங்கள்.

ஒரு முறை ஆப்பிரிக்கா கண்டத்தில் ஒரு தேசமாகிய எகிப்தை ஆண்ட டுடெங்காமன்(Tukenkhamen)என்னும் அரசன் தன்தேசத்தில்சிங்கங்கள் அதிகப்பட்டு மிகவும் தொந்திரவு செய்கின்றன என்று அவைகளை அதம் செய்வதற்காக என்னைத் தன் நாட்டிற்கு அழைத்திருந்தார். சிங்கவேட்டையில் மிகவும் பிரிய முடைய நான் மிகுந்த சந்தோஷத்துடன் ஒப்புக்கொண்டு அத்தேசம் போய்ச் சேர்ந்தேன். சிங்கவேட்டைக்காக ஒரு நல்ல நாள் குறித்துப் புறப்பட்டு சிங்கங்கள் நிரம்பிய காட்டிற் கருகில், சாயங்காலம் என் கூடாரத்தை அடித்து, நாளை வேட்டைக்குப் போகலாமென்று என் ஆட்களுக்குச் சொல்லிவிட்டு, தனியாய் ஒருபுற மிருந்த என் கூடாரத்திற்குள் போய்ப் படுத்துக் கொண்டேன். அன்றிரவு அரசர் அளித்த விருந்து சாப்பாட்டினால் சரியாக நித்திரை வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருக்கும் பொழுது, திடீரென்று தூரத்தில் சிங்ககர்ஜனை ஒன்று என் காதிற்பட்டது. உடனே எழுந்து பார்க்க, தூரத்தில் அநேக சிங்கங்கள் என் கூடாரத்தை நோக்கிவருவதைக் கண்டேன். உடனே என் துப்பாக்கியை எடுப்பதற்காக கூடாரத்தின் பின் பக்கம் நான் திரும்ப, அதற்குப் பின்புறமாக வேறு ஒரு பெரிய சிங்கக் கூட்டம்வருவதைக் கண்டேன்! இந்த சங்கடத்திற்கென்ன செய்வது ? இந்தப் பக்கம்வரும் சிங்கங்களை சுட்டுக் கொண்டிருந்தால்; முன் பக்கம்வரும் சிங்கங்கள் என்னைக் கொன்று விடுமே, என்று நான் யோசித்துக் கொண்டிருக்கும் பொழுது, மற்ற இரண்டு பக்கங்களும் கூட இரண்டு பெரும் சிங்கக் கூட்டங்கள் வருவதைக் கண்டேன்! இவைகளை யெல்லாம் கொல்வதற்கு வேறு வழியில்லை என்று ஒரு யுக்தி செய்தேன் ; உடனே என்னிடமிருந்த துப்பாக்கி மருந்தை பட்டை

யாக என் கூடாரத்தைச் சுற்றிலும் பொழிந்தேன் விரைவினில். இதற்குள்ளாக நான்கு புறமும் வந்து கொண்டிருந்தசிங்கக் கூட்டங்கள் அருகில் நெருங்கி விட்டன; உடனே நான் கூடாரத்தின் நடுவில் நின்று கொண்டேன்; நான்கு பக்கங்களிலும் சிங்கக் கூட்டங்கள் நெருங்கி நெருங்கி வர ஆரம்பித்தன. நான் கவனித்துக் கொண்டே யிருந்தேன்; அந்தச் சிங்கக் கூட்டங்கள் துப்பாக்கி மருந்து பட்டையாக வைக்கப்பட்டிருந்த இடத்திற்கு வந்ததும் என் கைத்துப்பாக்கியினால் அந்த மருந்தை நோக்கிச் சுட்டேன். அம்மருந்து உடனே பத்திக் கொண்டு வெடித்தது! அதன் பக்கத்திலிருந்த சிங்கங்களெல்லாம் மருந்து வெடியினால் கொல்லப்பட்டு ஆகாயத்தில் ஆகாசபாணம் போல் போய், பிறகு ஒவ்வொன்றாய்க் கீழேவிழுந்து மடிந்தன; ஏறக்குறைய ஒரு ஐந்து நிமிஷம் சிங்கமழை பெய்ததென்றே சொல்ல வேண்டும். மடிந்த எல்லா சிங்கங்களும் கீழே விழுந்த பிறகு, அத்தனை சிங்கங்களையும் நான் எப்படிக் கொண்டு போய் அரசருக்குக் காண்பிப்பது? அதற்காக அவைகளின் வால்களைமாத்திரம் அறுத்துக் கட்டிக் கொண்டு அம்மூட்டையை அரசருக்குக் கொண்டு போய்க் காண்பித்தேன். அவர் முதலில் மிகவும் ஆச்சரியப்பட்டு, பிறகு மிகவும் சந்தோஷப் பட்டவராய், ஒருவாலுக்கு ஐந்து பொன் விகிதம் எனக்குப் பரிசளித்தார். அது ஒரு பெரிய குவியலாச்சுது. அத்தனை பொன்னையும் எப்படி பாதுகாப்பதென்று கவலைப் பட்டவனாய், தினம் இரவில் கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டு போய், அத்தேசத்தில் ஸ்பிங்ஸ் (Sphinx) என்னும் சிங்கத்தின் பெரிய சிலையின் கீழ் புதைத்து வைத்திருக்கிறேன். உங்களுக்கு யாருக்காவது அப்பொன் வேண்டியதாயிருந்தால் அந்த ஸ்பிங்ஸ் சிலையின் கீழ் அறுபது அடி தோண்டிப் பார்ப்பீர்களாயின் உங்களுக்குக் கிடைக்கும்.

அந்த சிங்கங்களின் வால்கள் என்னவாயினவா? அவைகளையெல்லாம் நானிருந்த வீட்டின்மேல்மாடி அறையொன்றில் வைத்துப் பூட்டி யிருந்தேன். நான் தினம் தோறும் மேற்சொன்னபடி அரசர் எனக்குக்கொடுத்த பொன்னை ஒளித்து வைப்பதில் வேலையாயிருந்த பொழுது, அம்மேல் மாடியில் இருந்த எலிகள் அந்த வால்களையெல்லாம் தின்றுவிட்டன! நான் நம்முடைய தேசத்திற்குத் திரும்பிவரும்பொழுது அந்த வால்களை எல்லாம் கொண்டுவரலாமென்று அந்த அறையைத் திறந்து பார்த்தால், ஒரு வால் தவிர மற்றெல்லா வால்களையும் எலிகள் தின்றுவிட்டதைக் கண்டேன். மிகுந்திருந்த ஒருவாலைமாத்திரம் எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன். அதை யாராவது பார்க்க வேண்டுமென்றிருந்தால் என்னுடைய திருவூர் பங்களாவுக்கு நான் எப்பொழுதாவது போகும்போது, என்னுடன் வந்தால், அங்கே ஒரு (அறையில் அதையும் எலி சாப்பிட்டு விடாதபடி! அதைத் தொங்க விட்டிருக்கிறதைக் காண்பிக்கிறேன்.

# கண்டக்டர்கள் கவனிக்க வேண்டிய காரியங்கள்



நான் சுகுணவிலாச சபையில் சற்றேறக்குறைய 25 வருஷங்கள் கண்டக்டராயிருந்து நாடகங்களை நடத்தியிருக்கிறேன்; அதன் பிறகு எனக்கு வயது மேலிட்டபடியால் அவ்வேலையினின்றும் விலகிய போதிலும், நாளது வரையில் பன்முறை அச்சபையில் தமிழ் நாடகங்களை நடத்தியிருக்கிறேன். அன்றியும் சென்ற சில வருடங்களாக மதுரை டிராமாடிக் கிளப்பிலும், இன்னும் சில நாடக சபைகளிலும் சில நாடகங்களை முன்னின்று நடத்தி யிருக்கிறேன்; ஆகவே நாடகங்களை நடத்தும் முறையைப்பற்றி நாடகாபிமானிகளாகிய இதை வாசிக்கும் எனது நண்பர்கள் நான் அறிந்ததை தெரிந்துகொள்ள விரும்புவார்களென்று எண்ணின வனாய், கண்டக்டர்களுடைய வேலையைப்பற்றி கொஞ்சம் எழுதலா மெனத் துணிகிறேன்.

கண்டக்டர் என்பது ஆங்கில மொழியாகும், இதற்கு ஏற்ற மொழிபெயர்ப்பு சூத்திரதாரன் என்பதாம். சூத்திரதாரன் என் னும் சம்ஸ்கிருத பதத்திற்கு, பொம்மைக் கூத்தில் சூத்திரங்களைக் கொண்டு எப்படி ஒருவன் ஆட்டிவைக்கின்றானோ, அப்படியே ரங்கத் தில் நடிகர்களை ஆடும்படிச் செய்பவன், என்று பொருள்படும். ஆகவே அவனது வேலை மிகவும் முக்கியமானது என்பதற்கு ஐயமில்லை. சூத்திரதாரனுக்குரிய இலட்சணங்களைக் கூறுமிடத்து, சம்ஸ்கிருத நாடக கிரந்தங்களில் "அவன் காலத்தில் வழங்கிவரும் கதைகளி லும், நாடகங்களிலும், காரியங்களிலும் வல்லவனாயிருக்க வேண்டும் அவன் அநேக பாஷைகளிலும் பிராகிருதத்திலும் தேர்ந்தவனா யிருக்கவேண்டும், நாநா ஜாதியாருடைய நடையுடை பாவனைகள் அறிந்தவனாயிருத்தல் வேண்டும், நாடகங்களை நடத்துவதற்கு இன்றி யமையா அநேகம் விவரங்களைப் பயின்றவனாயிருக்க வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கிறது; சுருக்கிச் சொல்லுமிடத்து நாடகக் கலையைப் பற்றிய எல்லா விஷயங்களிலும் அவன் வல்லவனா

யிருக்கவேண்டும், என்றே சொல்லவேண்டும். முக்கியமாக அவை களையெல்லாம் அறிந்திருப்பது மன்றி அவைகளை மற்றவர்களுக்குத் தக்கபடி போதிக்கும் சக்தி வாய்ந்தவனாயிருக்க வேண்டும். அநேகம் பெயர் நாடகக் கலையைப் பற்றி பலவிஷயங்களை அறிந்தவர்களா யிருப்பதைப் பார்த்திருக்கிறேன்; ஆயினும் அவர்களுள் பெரும் பாலர் மற்றவர்களுக்கு அவற்றைக் கற்பிக்கும் திறமில்லாதவர்களா யிருக்கின்றனர்; இது பிரயோஜனப்படாது.

தான் கற்றதைப் பிறருக்குப் போதிக்கும்படியான சக்தியில்லாத உபாத்தியாயன் என்ன பிரயோஜனம்? ஒரு கண்டக்டர் ஒவ்வொரு ஆக்டருக்கும் இன்னின்ன வசனங்களை இன்னின்ன முகபாவத்துட னும் அங்க அபிநயத்துடனும் சொல்லவேண்டும், என்று வாயாற் சொல்லிக் கொடுக்கும்படியான திறமையைவிட, அவ்வண்ணம் நடித்துக் காட்டுவது பதின்மடங்கு மேலல்லவா? சில கண்டக்டர் கள் நாற்காலியின் மீது உட்கார்ந்து கொண்டு "இந்த வசனத்தை இன்னும் உருக்கமாய் ஆக்டு செய்யவேண்டும், இன்னும் கோபத்து டன் ஆக்டு செய்யவேண்டும்," என்று இப்படிப்பட்ட உத்திரவுகளை ஆக்டர்களுக்குச் சொல்லும் போது, அந்த ஆக்டர்கள் "நீங்கள் சொல்லுவது எங்களுக்கு நன்றாய்ப் புலப்படவில்லை, நீங்கள் சொல்லு கிறபடி ஆக்டு செய்து காட்டுங்கள்" என்று பதில் உரைக்க, அங்ஙனம் செய்ய முடியாதவர்களாய், விழித்திருப்பதைப் பார்த்திருக்கிறேன். மாணவர்கள் தாங்கள் கௌரவிக்கத் தக்க உபாத்தியாயர்களிட மிருந்துதான் பாடம் சரியாகக் கிரஹிப்பது போல, ஆக்டர்களும் தாங்கள் கௌரவிக்கத் தக்க கண்டக்டர்களிடமிருந்துதான் தக்க படி ஆக்டுசெய்ய கற்றுக் கொள்ளக்கூடும். இப்பெருமையை வஹிக்கத்தகாதவர்கள் கண்டக்டர்களாக இருக்க முயல்வது தவறு.

கண்டக்டர்கள் முக்கியமாக மிகவும் பொறுமை யுடையவர்களா யிருத்தல் வேண்டும். சில ஆக்டர்களுக்கு யாதேனுமொரு விஷயம் ஒரு முறைக்குப் பன்முறை சொல்லிக் கொடுத்தாலொழிய வராது; "நான் இரண்டு மூன்று முறை சொல்லி கொடுத்தும் உனக்கு வர வில்லையே!" என்று கோபித்துக் கொள்வதில் பிரயேஜனமில்லை. பாத்திரத்திற்கு தக்க மாணவனைத் தேர்ந்தெடுத்தபின் அவனுக்குச்

சரியாக அப்பாத்திரத்தை ஆக்டுசெய்ய வரும்வரையில் பன்முறை போதிக்கும் படியான பொறுமையுடையவர்களா யிருத்தல் வேண்டும்.

அன்றியும் கண்டக்டர்கள் ஊக்கமும் விடாமுயற்சியு முடைய வர்களாயிருக்க வேண்டும். நான் எனது "நாடக மேடை நினைவு" களில் குறித்தபடி, ஒரு நாடகமாடுவதில் பல இடையூறுகள் வந்து சேரும், அவைகளுக்கெல்லாம் பயப்படாது கொண்ட காரியத்தை எப்படியாவது சாதிக்க வேண்டும் என்னும் தீர்மானத்துடன் உழைக்கும் சக்தி அவர்களுக்கிருக்க வேண்டும்.

கண்டக்டர்கள் நாடகமாடுவதில் கவனிக்க வேண்டிய பல விஷயங்களை இனி குறிக்கிறேன்.

முதலில் ஒரு நாடகத்தை ஆடத்தீர்மானிப்பதின் முன், அந் நாடகத்தில் வரும் முக்கிய பாத்திரங்களை ஆடும் திறமையுள்ள ஆக்டர்கள் நமது கைவசத்திலிருக்கிறார்களா என்று ஆலோசித்தே அதை எடுத்துக் கொள்ளத் தீர்மானிக்க வேண்டும்; மாவுக்குத் தக்க பணியாரம் என்னும் பழமொழியின்படி, தம்மிடத்திலுள்ள ஆக்டர் களுக்குத் தக்கபடியான நாடகங்களையே எடுத்துக் கொள்ள வேண்டும்; ஆக்டர்கள் ஆடவிரும்பும் நாடகங்களை எடுத்துக் கொள்ளுதல் உசிதமாகாது. ஒவ்வொரு ஆக்டரும் தனக்கு இவ் வுலகத்திலுள்ள எல்லா பெரிய நாடகபாத்திரங்களையும் ஆடச் சக்தி யுண்டு என்று தான் எண்ணிக் கொள்வான் (நான் கூட நாட கங்கள் ஆட ஆரம்பித்த காலத்தில் நமக்கு ஸ்திரீ வேஷம் ஆட மிகவும் வல்லமையுண்டு என்னும் புத்திஹீனம் உடையவனாயிருந் தேன்!) ஆகவே அவர்கள் ஆடவிரும்பும் நாடக பாத்திரங்களை ஆட அவர்களுக்குச் சக்தி யிருக்கிறதா என்று தீர்மானிக்கும் குணம் கண்டக்டர்களுக்கு இன்றிமையாததாம்.

இன்ன நாடகத்தை ஆடுவது என்று கண்டக்டர்கள் தீர்மானித்துக் கொண்ட பிறகு, அந்நாடகத்தைப் பற்றி, அது நிகழ்ந்த காலம், அக்காலத்திய நடையுடை பாவனைகள், அந் நாடகத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்தவர்களின் அபிப்பிராயங்கள், அந்நாடகத்தை அதற்கு முன் அந்நாடகத்தில் ஆடியவர்களுடைய

அனுபவங்கள், முதலியனவெல்லாம் ஆராய்ந்தறிந்து, நாடகபாத்திரங்களுக்கு நாடகத்தை ஒரு முறை முற்றிலும் படித்துக் காட்டி, மேற்சொன்ன விஷயங்களை யெல்லாம் அவர்களுக்குப் போதிக்க வேண்டும். பிறகு ஒவ்வொரு நாடக பாத்திரத்திற்கும் அவனது பாகத்தைத் தனியாக நடித்துக் காட்ட வேண்டும். பிறகே அவர்களை தங்கள் தங்கள் பாகங்களை குருட்டுப்பாடம் செய்யும்படி கேட்க வேண்டும். இல்லாவிட்டால் இதற்கு முன்பே அவர்கள் தங்கள் பாகங்களை மனனம் செய்ய ஆரம்பித்துவிட்டால், ஏதாவது குறுக்கு வழியில் பாய்ந்து விட்டார்களானால், அவர்களைப் பிறகு திருப்புவது கடினம். இதன்மேல் ஆக்டர்களெல்லாம் தங்கள் தங்கள் பாடங்களைப் படித்த பிறகு, அவர்களை ஒன்றாய்ச் சேர்த்து ஒத்திகை செய்ய வேண்டும். ஒத்திகைகளெல்லாம் சரிவர நடந்த பிறகு, ஒரு தினமாவது, ஆடும்படியான நாடகமேடையின் மீது அவரவர்களுடைய நாடக உடையுடன் முழு ஒத்திகை பார்க்க வேண்டும்; இதனால் பெரும் நன்மையுண்டு. சென்னை டிராமாடிக் ஸொஸைடியார் (Madras Dramatic Society) இவ்வாறு சம்பூர்ண ஒத்திகை மேடையின் மீது செய்து பாராது ஒரு நாடகமும் ஆடுவதில்லை என்பதை நான் அறிந்துள்ளேன். மறந்துபோன அநேகம் சில்லரை விஷயங்களை யெல்லாம் இதனால் பூர்த்தி செய்து கொள்ளலாம்.

இதற்கு முன்பாகவே நாடகத்தின் ஒவ்வொரு காட்சிக்கும் இன்னின்ன திரைவேண்டுமென்றும், இன்னின்னவாறாக ரங்க ஏற்பாடுகள் (Scenic arrangements) செய்ய வேண்டுமென்றும் கண்டக்டரானவர் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் தற்காலம் சாதாரணமாக பல சபைகளில் திரைமுதலியன ஏற்பாடு செய்வதற்காக ஸ்டேஜ் டைரக்டெர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அப்படியில்லாத சபைகளில், இதற்காக கண்டக்டர்கள் ஒவ்வொரு சபையிலும் பிரத்தியேகமாய் ஒரு மனிதனை ஏற்பாடு செய்தல் உசிதமாம். கண்டக்டர்கள் நாடக தினத்தில் பலவிஷயங்களைக் கவனிக்க வேண்டிவரும், ஆகவே தாங்களே எல்லா வேலைகளையும் பார்ப்பதைவிட, இம்மாதிரியான வேலைகளுக்கெல்லாம் பிரத்தியேகமாக மனிதர்களை ஏற்பாடு செய்தல் மிகவும் நலமாம். ஒவ்வொரு காட்சிக்கும் இன்னின்ன திரைவிடவேண்டும், இன்னின்ன ஏற்

பாடுகள் செய்ய வேண்டும், இன்னின்ன வாறாக அலங்காரங்கள் செய்யவேண்டும், என்பதைக் காகிதங்களில் எழுதி அவர்களிடம் கொடுத்து, அவர்கள் அவற்றையெல்லாம் ஒரு முறை ஒத்திகை செய்து பார்க்கச் சொல்லிவிட்டால், நாடகதினத்தில் இந்த ஏற்பாடு களெல்லாம், தடங்கலின்றி காலதாமதமின்றி, சுலபமாய் நடைபெறும்.

மேற்சொன்னபடியே நாடக பாத்திரங்கள் அணியவேண்டிய உடைகளைப் பற்றியும், இன்னின்ன பாத்திரம் இன்னின்னபடி வேஷம் தரிக்க வேண்டும் என்று கண்டக்டர்கள் முன்பே தீர்மானித்து, இதைப்பார்க்க மற்றொரு மனிதனை ஏற்பாடு செய்து இந்த வேலையை அவனிடம் ஒப்புவித்தால் மிகவும் சவுகர்யமாம். அநேக சபைகளில் தற்காலம் இதற்காக கிரீன் ரூம் டைரெக்டர்கள் (Green Room Directors) என்று ஏற்படுத்தப் பட்டிருக்கிறது; இது மற்ற சபைகளும் அனுசரிக்கத் தக்க வழக்கமாகும்.

இச்சந்தர்ப்பத்தில் கண்டக்டர்களாயிருந்து ஒரு நாடகத்தை நடத்துபவர்கள், தாங்களே நாடகத்தில் முக்கிய வேஷம் தரித்தல் நலமா அல்லவா என்றும் ஒரு கேள்வி பிறக்கிறது. நான் இந்த நாற்பத்தேழு வருடங்களாக நான் கண்டக்டராயிருந்த நாடகங்களில் பெரும்பாலும் நானே முக்கிய நாடகபாத்திரமாக (Hero) நடித்த போதிலும், என் ஆழ்ந்த அபிப்பிராய மென்னவென்றால், அவ்வாறு செய்வது மிகவும் கடினம், கண்டக்டராயிருப்பவன் நாடகத்தில் ஆடாமல் எல்லாவற்றையும் மேல் விசாரணை செய்வதே உசிதம், என்பதாம். இரண்டு வேலைகளையும் ஒருவனே பார்த்தல் மிகவும் சிரமமாம்; அன்றியும் கண்டக்டரா யிருப்பவன் சாதாரணமாக நாடகத்தில் பெரிய பாகம் எடுத்துக் கொள்ளாதிருப்பதினால் இன்னொரு பலன் உண்டு; பல நாடகங்களில் நாடகதினத்தில், ஏதோ அசௌகர்யத்தால் யாராவது ஆக்டர் வராமலிருப்பதுண்டு; அப்படிப்பட்டசமயங்களிலெல்லாம், அதற்காக ஆட்டத்தை நிறுத்தாமல், கண்டக்டராயிருப்பவன் கடைசி நிமிஷத்தில் அவ்வேடத்தைத் தான் பூண்டு நாடகத்தை நிறைவேற்றுவதே மிகவும் உசிதமாம். ஆகவே கண்டக்டரா யிருப்பவன் திடீரென்று ஒரு நாடகத்தில் எந்த வேடமும் எடுத்துக்கொள்ள சக்திவாய்ந்தவனா யிருத்தல் மிகவும் அனுகூலமாம்.

இதுவரையில் கண்டக்டர்கள், ஸ்டேஜ் டைரெக்டர்கள் கிரீன் ரூம் டைரெக்டர்கள் கடமையைப் பற்றி எழுதினேன். இனி ஒவ்வொரு நாடகத்திற்கும், இன்றியமையாத புராம்டர்களைப் பற்றிக் கொஞ்சம் எழுதுகிறேன்.

புராம்டர் என்கிற பதத்திற்கு சொல்லிக் கொடுப்பவன் என்று பொருட்படும். அதாவது நாடகத்தில் நாடக பாத்திரம் ஏதாவது மறந்து போனால் அதை ஒரு பக்கமாயிருந்து சொல்லிக் கொடுப்பவனும். புஸ்தகங்களின்றி, நாடக பாத்திரங்கள், தங்கள் இச்சைப்படி பேசும் நாடகசபைகளுக்கு புராம்டர் வேண்டியதில்லை. நாடகாசிரியன் எழுதியபடி வசனத்தைப் பேசும் ஆக்டர்களுடைய சபைகளுக்கு ஒரு புராம்டர் அதி அவசியமாம். எப்படிப்பட்ட சிறந்த ஞாபக சக்தியையுடைய ஆக்டராயிருந்த போதிலும் சில சமயங்களில் தான் ரங்கத்தின் மீது சொல்ல வேண்டிய வசனத்தை மறக்கும் சமயங்கள் நேரிடும், அச்சமயத்தில் ஆக்டரைக் கை கொடுத்துக் கரையேற்றுபவன் இந்த புராம்டரே. ஒவ்வொரு நாடகத்திற்கும் தக்கதோர் மனிதனைப் புராம்டராக ஏற்படுத்த வேண்டியது கண்டக்டருடைய கடமையாகும்; இந்த புராம்டர் நாடகக் கதையைப் பன் முறை முன்னதாகவே படித்து வைத்திருத்தல் நலம். முதன் முறை நாடகம் நடிக்கப்படும் பொழுது, சைட் படுதாவிலிருந்து பக்கத்திலிருக்கும் ஆக்டர் மறந்து போனதை அவனுக்கு எடுத்துச் சொல்ல புஸ்தகத்திலிருப்பதை எழுத்துக் கூட்ட ஆரம்பித்தால், பிரயோஜனப் படாது; அப்படிச் செய்வது எப்படி யிருக்குமெனில், எதிரிவாள் யுத்தத்திற்கு வந்த பின் அவனெதிரில் தன் வாளைத் தீட்டுவதற்கு ஒப்பாகும்! அன்றியும் இந்த புராம்டர் ஒத்திகைகள் நடக்கும் பொழுதெல்லாம் தானும் கூட இருந்து கவனித்து வருவதில் மிகவும் பலனுண்டு. அப்படிச் செய்வதால், இன்னின்ன ஆக்டர் இன்னின்ன இடங்களில் சாதாரணமாகத் தவறுகிறான் என்று கவனிக்க அனுகுணமாகும். இதனால் நாடகத்தினத்தில் அந்தந்த இடங்களில் சுலபமாய்ச் சொல்லிக்கொடுக்கக் கூடும்; அன்றியும் புராம்டரானவர் நாடகம் எழுதியுள்ள பாஷையில் வல்லவனாயிருத்தல் உசிதமாம். சில சமயங்களில் ஆக்டர்கள் தாங்கள் பேச வேண்டிய வாக்கியங்களை, கிரமப்படி அல்லாது மாறாகத் தவறி

ஆரம்பித்து விடுவார்கள், அச்சமயங்களில் புராம்டரானவன் அதைச் சரிபடுத்தி, வாக்கியத்தைப் பூர்த்தி செய்து, புராம்டு செய்யவேண்டும். புராம்டர்கள் கவனிக்கவேண்டியதின்னொன் றுண்டு; ஆக்டர்கள் மறந்து திகைக்கும் பொழுது, அவர்கள் மறந்த வாக்கியத்தின் முதலிலுள்ள, 'அரசே' 'பிராண நாதா' 'நண்பா' அல்லது ஹா !,—ஓ!—உம்!, முதலிய பதங்களை மாத்திரம் எடுத்துக் கொடுப்பதில் பிரயோஜனமில்லை. சாதாரணமாக ஆக்டர்களுக்கு இன்னொருடன் பேசவேண்டுமென்பது மறந்து போகாது; அவர்கள் மறந்து போன வாக்கியத்தின் கருத்தமைந்த முக்கியமான முதல் பதங்களையே எடுத்துக் கூறவேண்டும். சில ஆக்டர்கள் ஞாபக மறதியால் முன்னும் பின்னுமாகப் புஸ்தகத்திலிருப்பதை எடுத்துப் பேசிவிடுவார்கள், அப்படிப்பட்ட குற்றங்களை யெல்லாம் சரிப் படுத்தி, கதையின் தோரணை விடாது பூர்த்தி செய்யும் குணம் புராம்டருக்கு இருக்குமாயின், மிகவும் மெச்சத் தக்கதே.

இந்த புராம்டிங் (Prompting) விஷயமாக நமது நாடக மேடையில் இரண்டு குற்றங்கள் சாதாரணமாயுண்டு, ஒன்று, ஜீவனோபாயமாக ஆடும் சில நாடக சபைகளில், புராம்டரே இல்லா மலிருப்பதாம்; மற்றொரு குற்றம், வினோதத்திற்காக நாடகமாடும் சபைகளில் ஒரு புராம்டர் போதாமல் பல புராம்டர்களை ஏற் படுத்திக்கொள்வதாம்! சில நாடகங்களில், சில ஆக்டர்கள் தங்கள் பாடங்களையே படிக்காமல், ஒவ்வொரு பக்கப்படுதா அருகிலும் ஒவ்வொரு புராம்டரை ஏற்படுத்தி வைக்கின்றதை, நான் கண்ணாரக் கண்டிருக்கிறேன்; எங்கெந்தப்பக்கம் ஆக்டர் போகிறாரோ அந்தந் தப் பக்கம் இருக்கும் புராம்டர் புராம்ட் செய்யவேண்டியது! இஃதன்றி வசனத்திற்கு ஒரு புராம்டர், பாட்டிற்கு ஒரு புராம்டர்! இச்சந்தர்ப்பத்தில் சில மாசங்களுக்கு முன்பாக நான் கண்ட ஓர் விந்தையைக் கூறுகிறேன். பாடமே படிக்காது ரங்கத்தின்மீது ஆட வந்த ஒரு ஆக்டர், சைட்படுதாக்களில் இருக்கும் புராம்டர்கள் போதாதென்று, ரங்கத்தின் மீது விட்டிருக்கும் திரைக்குப் பின்னால் ஒரு புராம்டரை நிற்கச் சொல்லி, தான் ரங்கத்தின் மீது எப்பக்கம் போகிறாரோ, அப்பக்கமெல்லாம் திரைக்குப்பின்னால் ஓடி புராம்ட் செய்யும்படி ஏற்பாடு செய்து வைத்தார்! நமது தமிழ் நாடக மேடை

அபிவிர்த்தியடையவேண்டுமென்றால் இப்படிப்பட்ட ஆபாசங்களை யெல்லாம் நமது ஆக்டர்கள் தவிப்பார்களாக.

அன்றியும் நமது ஆமெட்டேர் (amateur) நாடகமேடையில் இந்தப் புராம்டிங் விஷயமாக நேரிடும் இன்னொரு குற்றத்தை இங்கு குறிப்பிக்கிறேன். சில சமயங்களில், ரங்கத்தில் இருக்கும் ஆக்டரது குரலைவிட சைட்படுதாவண்டை மறைந்திருக்கும் புராம்டர் குரலானது அதிக ஸ்பஷ்டமாய் சபையிலுள்ளோருக்குக் கேட்கிறது! ஒரு முறை எனது நாடகமொன்றை ஒரு சபையார் ஆடின போது அதைப்பார்க்கப் போன எனது நண்பரொருவரை, ஆக்டர்களெல்லாம் தங்கள் பாடங்களைச் சரியாகப் படித்திருந்தார்களா என்று நான் கேட்டபோது, அவர் "ஆக்டர்களெல்லோரையும் விட பாடம் சரியாகப் படித்தவர் புராம்டர்தான்! அவர் குரல்தான் எனக்கு நன்றாய்க் கேட்டது!" என்று விடை பகன்றது எனக்கு ஞாபகமிருக்கிறது! இப்படிப்பட்ட குற்றமானது சாதாரணமாக ஆமெட்டேர் (amateur) ஆக்டர்களிடம்தான் அதிகமாய்க் காணப்படுகிறது. அவர்களிற் சிலர் புராம்டரிடம் போய் "நீ ஒன்றும் விடாமல் என்பாகத்தைபெல்லாம் படித்துக் கொண்டே போ, உன் பின்னால் நான்சொல்லிக்கொண்டே வருகிறேன்" என்று கூறியதையும் சில்முறை நான் என் காதாரக் கேட்டிருக்கிறேன். இது பெருங்குற்றமென்று நான் சொல்லவேண்டியதில்லை. இப்படிப்பட்ட குற்றத்தை இனியாவது நமது ஆக்டர்கள் நிவர்த்திப்பார்களாக.

இனி நாடகம் நன்றாய் நடந்தேறுவதற்கு கண்டக்டர் கவனிக்க வேண்டிய இன்னொரு விஷயம் என்னவென்றால்—நாடகத்திலுள்ள ஒவ்வொரு காட்சிக்கும் எப்படி வெளிச்சம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்பதே, சுமார் பத்து பன்னிரண்டு வருடங்களுக்கு முன் தமிழ் நாடக மேடையில் இதை கவனித்தார் ஒருவரு மேயில்லை யென்றே ஒருவாறு கூறலாம். எல்லா காட்சிகளுக்கும்—அவைகள், காடாயிருந்த போதிலும், அரண்மனை தர்பாராயிருந்த போதிலும், அந்தப்புரமாயிருந்த போதிலும், காலையில் நடக்கும் காட்சியாயிருந்த போதிலும், நடுப்பகலில் நடக்க வேண்டிய காட்சியாயிருந்த போதிலும், சாயங்காலக் காட்சியாயினும், நள்ளிருட்டுக் காட்சியாயினும், ரங்கத்தில் ஒரேமாதிரியான வெளிச்சம் தான் ஏற்படுத்தப் பட்டிருந்தது. தற்காலமும் இவைகளுக்கெல்லாம்

வெவ்வேறான வெளிச்சங்கள் ஏற்படுத்த வேண்டுமென்பதை கவனிக்கும் சபைகள் மிகவும் சிலவென்றே சொல்ல வேண்டும். இவ் விஷயத்தில் எங்கள் சபையும் மிகவும் பின்னிட்டுத்தான் இருந்தது; சுமார் பன்னிரண்டு வருடங்களுக்கு முன் நான் "பௌத்தாவதாரம்" என்னும் நாடகத்தை நடத்திய பொழுது, சென்னை டிராமாடிக் சொசைடியின் அங்கத்தினராகிய என் நண்பர் லெஸ்லி கோல்ஸ் (Leslie Coles) என்பவரையும் அவரது மனைவியையும் அந்நாடகத்திற்கு வரவழைத்திருந்தேன்; நாடகம் முடிந்த பிறகு நாடகத்தைப் பற்றி அவரது அபிப்பிராயத்தைக் கேட்க, அவர் "மற்றெல்லாம் சரியாகத்தானிருந்தது, உங்களுக்கு ரங்கத்தில், வெளிச்சம் ஏற்பாடு செய்வது அதிகமாகத் தெரியாது போலும்; ஒரு காட்சியில் தவிர மற்றக் காட்சிகளிலெல்லாம் இதை நீங்கள் கவனிக்கவேயில்லை" என்று ஸ்பஷ்டமாய் எடுத்துரைத்தார். இதன் பிறகுதான் காட்சிகளுக்குத் தக்கபடி வெளிச்சம் ஏற்படுத்த வேண்டிய விஷயத்தைக் கவனிக்க ஆரம்பித்தேன். ஆங்கில நாடகங்களில் இது மிகவும் கவனிக்கப்படுகிறது; இதற்கென்றே லைட்டிங் மான் (Lighting man) என்று ஒருவனை ஏற்படுத்தி ஒவ்வொரு காட்சிக்கும் தக்கபடி வெளிச்சம் ஏற்பாடு செய்கிறார்கள். சில காட்சிகளில், இருண்டிருந்து சந்திரோதயமாக மாறும்படி நாடகாசிரியர் ஏற்படுத்தியிருப்பார், அல்லது காட்சியின் மத்தியில் சூரியாஸ்தமனமாகலாம், அல்லது சூரியோதய காலமாயிருக்கலாம், இவற்றிற்கெல்லாம் தக்கபடி ரங்கவெளிச்சங்களை கண்டக்டர்கள் ஏற்பாடு செய்யவேண்டியது மிகவும் முக்கியமாம். இவ்விஷயத்தில் தமிழ் நாடக மேடையானது ஆங்கிலர்களிடமிருந்து கற்க வேண்டியது அதிகமிருக்கின்றது.

நாடகமேடை வெளிச்ச ஏற்பாடுகளைப் பற்றி எழுதும் பொழுது, தற்காலத்தில் எல்லா தமிழ்நாடக மேடைகளிலும் மிகவும் சாதாரணமாக உபயோகிக்கப்பட்டுவரும் லைம்லைட் (Lime light) என்பதைப்பற்றி என் அபிப்பிராயத்தை எழுத விரும்புகிறேன்.

இந்த லைம்லைட் என்பது இங்கிலீஷ்காரரிடமிருந்து நாம் கற்றுக்கொண்டதாம். நாற்பது வருடங்களுக்கு முன்பாக இது

நமது ரங்கங்களில் கிடையவே கிடையாது. அக்காலங்களிலெல்லாம் ஜீவனோபாயமாக நாடகமாடும் மேடைகளிலெல்லாம் அயன் ராஜ பார்ட் அல்லது அயன் ஸ்திரீ பார்ட் வருவதானால், பக்கப்படுதா வருகில் மத்தாப்புகளைக் கொளுத்துவார்கள்! மத்தாப்பு எரிகிற வரையில் எல்லாம் ஜகஜ்ஜோதியாயிருக்கும், மத்தாப்பு அணைந்த வுடன் எல்லாம் முன்பிருந்ததைவிட கறுப்பாய்க் காட்டும்! அன்றி யும் ரங்கம் முழுவதும் மத்தாப்புப் புகை சூழ்ந்து ஆக்டர்கள் தொண்டையையெல்லாம் கெடுத்து வைக்கும்; இவ்வழக்கமானது பல வருஷங்களுக்கு முன்னேயே கைவிடப்பட்டது; இதற்கு முக் கிய காரணம் மின்சார விளக்குகள் நமது மேடைகளில் உபயோகத் திற்கு வந்ததேயாம்.

இந்த மின்சார விளக்குகள் நமது நாடக மேடைகளில் உபயோகத்திற்கு வந்த பிறகு, இன்னொரு கஷ்டம் வந்து சேர்ந்தது. இந்த எலெக்டிரிக் வெளிச்சங்கள் அழகாயிருக்கிறதென்று, அவை களை இன்ன காட்சிகளில் உபயோகப் படுத்தலாம் இன்ன காட்சி களில் உபயோகப் படுத்தலாகாது, என்று யோசிக்காமல், எல்லாக் காட்சிகளிலும் உபயோகிக்க ஆரம்பித்து விட்டார்கள்! இவ்விஷயத்தில் என் கண்ணாரக் கண்ட சில ஆபாசங்களை இங்கு எடுத்துக் காட்டுகிறேன்; ஒரு சபையில் ஒரு ராஜஸ்திரீ பகற்பொழுதில் சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டு ராஜரீகம் செலுத்தும் காட்சியில், சிம்மாசனத்தின் மீது இந்த விளக்குகள் தொங்கிக் கொண்டிருந்தன; மற்றொரு சபையில் வேட்டையினால் களைத்து வழி தெரியாத ஒருவன் ஓர் அரசனுடைய உத்யான வனத் தில் பகற்பொழுதில் உறங்கும் காட்சியில் எலெக்டிரிக் விளக்குகள் தொங்கிக் கொண்டிருந்தன; மற்றொரு ரங்கத்தில் காட்டுக் காட்சி யில் வரிசை வரிசையாக இந்த விளக்குகள் தொங்க விட்டிருந் ததைக் கண்ணுற்றிருக்கிறேன்! இத்தகைய ஆபாசங்களை யெல்லாம் நமது நாடக மேடையானது அபிவிர்த்தியடைய வேண்டுமென்று விரும்பும் கண்டக்டர்கள் விலக்குவார்களாக. ஒரு காட்சியில் வெளிச் சம் அதிகமாக வேண்டுமென்றால், இந்த எலெக்டிரிக் விளக்குகளை மறைத்து அவற்றின் ஒளிமாத்திரம் ரங்கத்தில் விழும்படி ஏற்பாடு செய்வது உசிதமாம். அன்றியும் எலெக்டிரிக் விளக்குகள் கண்டு

பிடிப்பதற்கு ஆயிரம் வருடங்களுக்கு முன் நடந்த கதைகளில் இவ்விளக்குகளை உபயோகிப்பது முற்றிலும் தவறாகும். இதிஹாச புராண காலங்களில் பெரிய நிலைவிளக்குகள் உபயோகிக்கப் பட்டதாக நாம் அறிகிறோம். அப்படிப்பட்ட விளக்குகள் அக்காலத்திய நாடகங்களில் உபயோகிப்பது எவ்வளவு அழகாயிருக்கும்!

அன்றியும் தற்கால நாடகமேடைகளில் நடக்கும் மற்றொரு ஆபாசம்—அடித்ததற்கெல்லாம் அதிர்வெடிகளை உபயோகிப்பதாம். எனக்கு ஞாபக மிருக்கிறவரையில் இந்த வெடிகளை பார்சீ கம்பெனியார்தான் சென்னையில் சுமார் 40 வருடங்களுக்கு முன் உபயோகித்தனர் மாறும் காட்சிகளில் (Transformation Scene) இவைகளை அவர்கள் உபயோகித்தனர்; ஒரு காடானது பூந்தோட்டமாகவோ, ஒரு ஸ்மசானமானது அரண்மனையாகவோ மாறும் தருணத்தில், ஏககாலத்தில் முன்னிருந்த படுதா, துண்டுகள், முதலியவற்றை யெல்லாம், மாறச் செய்வதற்கு இந்த வெடிகள் அனுகுண மாயிருந்தன. அன்றியும் ஏதோ மந்திர சக்தியினால் ஒரு குகைவெடித்து உத்யானவனமாக மாறும்பொழுதோ, அல்லது ஓர் ரிஷியின் சாபத்தினால் ஒரு மாளிகையானது பாழடைந்து காடாகும் பொழுதோ. இத்தகைய சந்தர்ப்பங்களில் இவ்வெடிகளை உபயோகித்தல் தவறாகாது, பொருத்தமாகவு மிருக்கும், விநோதமாயு மிருக்கும்; இதையறியாது இவை சபையோரை பிரமிக்கவும் ஆச்சரியப்படவும் செய்கிறதே யென்று, எல்லாக் காட்சிலும் அசந்தர்ப்பமான இடங்களிலும் உபயோகித்தல் ரசாபாசமாம். சில சபைகளில், அயன் ராஜ பார்ட் வரும்பொழுது—வெடீல்! அயன் ஸ்திரீ பார்ட் வரும்பொழுது—வெடீல்! விடுதிப்பற்றி எரிவதற்கு ஒரு வெடீல்! இம்மாதிரியாக வெடீல்களை உபயோகிப்பது மிகவும் அனுசிதமாம். இதை நினைக்கும்போது கோயில்களில் ஸ்வாமி புறப்படும் பொழுது வெடீல்கள் போடுகிறார்களே அது ஞாபகம் வருகிறது. நான் பார்த்த ஒரு நாடகசபையில் ஒரு முக்கிய ஆக்டர் பாட்டு ஒன்றை ஆரம்பிப்பதற்காக ஒரு வெடீல் போடப்பட்டது! இனியாவது இப்படிப்பட்ட அசந்தர்ப்பமான சமயங்களில் கண்டக்டர்கள் இந்த வெடீல்களை உபயோகிக்காதிருப்பார்களாக.

நான் அறிந்த சபைகளில் அடிக்கடி இந்த வெடீல்களையும், பாண வேடிக்கைகளையும் உபயோகப்படுத்தும் ஒருவருக்கு வெடீல்...ஐயர் என்றே பெயர் வைத்திருந்தார்கள்.

மேலே எடுத்துக் காட்டிய குற்றங்களை யெல்லாம் கண்டக்டர்கள் கவனித்து, நமது நாடகமேடையை சீர்திருத்துவார்களென எண்ணியே இவற்றைப் பற்றி சற்று விஸ்தாரமாக எழுதலானேன்.

—∘∘:◈:∘∘—

# தற்கால நாடக சபைகளை அபிவிர்த்தி செய்வதெப்படி?



தற்காலம் தென் இந்தியாவில் ஜீவனுத்தாரமாக நாடகமாடும் சபைகளில் உள்ள சில குற்றங்களை எடுத்துக்காட்டி அவைகளை அகற்றி நாடகசபைகளை அபிவிர்த்தி செய்வதெப்படி என்பதைப் பற்றி இனிஎழுத விரும்புகிறேன். இப்படி நான் செய்வது அக் குற்றங்களையெல்லாம் நமது கற்றறிந்த நாடகாபிமானிகள் நிவர்த்திக்கும் பொருட்டே யன்றி, வீணுகக் குறை கூறும் பொருட்டன்று யென்பதை இதை வாசிக்கும் எனது நண்பர்கள் மதிப்பார்களாக. நான் எடுத்துக் காட்டப் போகிற சில குற்றங்கள், ஆமெடூர் (Amateur) சபைகளிலும் இருக்கின்றன. அவைகளும் இவற்றை விலக்க வேண்டியே, இவற்றைக் குறித்து எழுதுகிறேன்.

முதலாவது, பெரும்பாலும் இச்சபைகளிலெல்லாம் நாடகம் குறித்த மணிக்கு ஆரம்பிப்பதில்லை; 9½ மணிக்கு நாடக ஆரம்பம் என்று விளம்பரம் செய்திருந்தால், பெரும்பாலும் 10 மணிக்குள்ளாக ஆரம்பித்தால் வந்திருப்பவர்களுடைய அதிர்ஷ்டமாகும்! சாயங்காலம் 5½ மணிக்கு ஆரம்பம் என்று பிரசுரம் செய்திருந்தால், 6 மணிக்கு முன்பாக ஆரம்பிப்பது மிகவும் அபூர்வமாகும். ஆமெடூர் (amateur) சபைகளில் இக்குறை சாதாரணமாகக் கிடையாது. இக்குறையை முற்றிலும் ஒழித்து நமது நாடக சபைகள் சீர்திருத்தம் பெறும்படிப் பிரார்த்திக்கின்றேன்.

இரண்டாவது குறை, நாடக கம்பெனிகளில் பெரும்பாலும் ஆக்டர்கள் வேஷத்திற்குத் தக்க உடையைத் தரிப்பதில்லை. அயன் ராஜ்பார்ட் ஆக்டர்கள் என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கும் பேர்களுள் பலர், கம்பீரமான ஒன்றிரண்டு சம்கி அல்லது சரிகை உடுப்புக்களை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் எந்த வேஷம் பூண்டாலும் அந்த உடுப்புகளை உடுத்திக் கொண்டு மேடையின் மீது தோன்ற வேண்டியதுதான்! சுப்பிரமணியராக வந்தாலும் அதே உடுப்பு; வேடனுய் வந்தாலும் கோவலனுய் வந்தாலும்

அர்ஜுனனாய் வந்தாலும் அதே உடுப்பு! பிலேந்திரனாக வந்தாலும் அதே உடுப்பு, கண்டிராஜாவாக வந்தாலும் அதே உடுப்பு தான்! இதை பற்றி நான் இன்னும் விவரிக்க வேண்டியதில்லை. ஆண் வேடமோ, பெண் வேடமோ, எந்த வேடம் புனைந்தாலும் அவ்வேடத்தின் காலம், சந்தர்ப்பம், முதலியவற்றிற் குரிய ஆடை ஆபரணங்கள் இன்னதென்று ஆராய்ந்தறிந்து பூணுவதே உசிதமாம். எனது ஆங்கில நண்பர்கள் யாராவது தமிழ் நாடக மேடையைக் காண வேண்டுமென்று விரும்புவார்களானால், மேற் சொன்ன ஆபாசங்களைக் கண்டு அவர்கள் எங்கு நகைக்கிறார்களோ வென்று நான் அவர்களைத் தமிழ் நாடகங்களை பார்க்க அழைத்துக் கொண்டு போக எப்பொழுதும் அஞ்சுகிறேன்.

மூன்றாவது, சாதாரணமாக நாடக கம்பெனிகள் நாடகத்தின் காட்சிகளுக்குத் தக்கபடி திரைகள் முதலியவற்றை ஏற்பாடு செய்கிறதேயில்லை. நாடக சாலையில் என்ன திரைகள் முன்பாகக் கட்டப்பட்டிருக்கின்றனவோ, அவைகளை ஒன்று மாறி ஒன்றை, காட்சிக்கு காட்சி விடவேண்டியது தான். அது பொருத்தமாயிருக்கிறதா இல்லையா என்று பார்ப்பதே யில்லை. இவ்விஷயத்தில் ஆமெட்டூர் (amateur) நாடக சபைகளும் பெரும்பாலும் பிழை இழைக்கின்றனர். சீன்காரனிடம் என்ன சீன்களிருக்கின்றனவோ அவைகளை அவன் இச்சைப்படி கட்டிவிடவேண்டியது தான்! நாடக காலத்திற் கேற்ற திரைகளாயிருக்கின்றனவா என்பதைப்பற்றிப் பெரும்பாலும் கவனிப்பதே யில்லை. நான் பார்த்த ஒரு நாடகத்தில் துவாபரயுகத்தில் நடந்த சுபத்திரையின் கலியாண நாடகத்தில் கலி யுகத்தில் ஓர் நாட்டுக் கோட்டை ஊரின் தோரண சீன் ஒன்று விடப்பட்டிருந்தது! இதைப்பற்றி நான் முன்பே விரித்துரைத்திருப்பதால், இனியாவது இவ்விஷயத்தில் எல்லாச் சபைகளும் தங்கள் கவனத்தைச் செலுத்துவார்களாக, என்னும் கோரிக்கையுடன் இதை முடிக்கிறேன்.

நான்காவது குறை யென்னவெனில், நாடக கம்பெனிகளின் நாடகங்கள் பெரும்பாலும் சங்கீதக் கச்சேரிகளாயிருப்பதே. இது தான் என் அபிப்பிராயத்தில் தற்காலத்திய பெருங்குற்றமாம். நாடகக் கம்பெனிகளில் ஆடும் ஒவ்வொரு சிறந்த நடிகனும், ரங்கத்

திற் பிரவேசித்தவுடன் ஏதாவது பாடவேண்டும், அல்லது பிர வேசிக்கும்பொழுதே ஏதாவது பாடிக்கொண்டு வரவேண்டும், என்று ஒரு மிகவும் தவறுன அபிப்பிராயம் இருக்கின்றது. பிர வேசமாகவேண்டிய சந்தர்ப்பம் அல்லது கட்டம் எப்படிப் பட்டது; இதில் பாடிக்கொண்டுவருவது பொருத்தமானதா அல்லவா என்று கொஞ்சமேனும் யோசிப்பதேயில்லை. ஒரு அரசன் காட்டில் வேட்டை யாடப் போகிருன்; அதற்குப் பிரவேசிக்கும் பொழுது ஒரு பாட்டு! ஒரு திருடன் ஒரு வீட்டில் திருடப்போகிருன் — அதற்கொரு பாட்டு! துரியோதனன் சகுனியால் பாண்டவரைத் தன் கைவசப் படுத்தச் சூழ்ச்சி செய்யப் போகிருன், அதற்கொரு பாட்டு! இப் படிப்பட்ட ஆபாசமான உதாரணங்களைப் பெருக்கிக்கொண்டு போனுல்,இந்த வியாசம் முடியாது! இப்படிப் பாடுவதிலும் சந்தர்ப் பத்திற் கிசைந்த பாட்டாயிருக்கிறதா? அதுவும் இல்லை. வள்ளி மணம் எனும் நாடகத்தை தமிழில் நடத்துவதில் முதன் முதல் சுப்ரமணியர் நாரதருக்குக் காட்சி கொடுக்கும் காட்சியில், சுப்பிர மணியர், "ஜெய ஜெய கோகுல பாலா" என்னும் பாட்டைப்பாடிக் கொண்டு ரங்கத்தில் பிரவேசிப்பார்! ஞானசவுந்தரி நாடகத்தில் பிலேந்திரன், முதலில் தோன்றும்பொழுது, "எவரனி நிர்ணயின் சேதிரா" எனும் பாட்டை பாடுவார். ஒரு முறை எனது நாடக மான லீலாவதி-சுலோசனு, ஒரு கம்பெனியாரால் ஆடப்பட்ட பொழுது, அயன் ராஜபார்ட்டாகிய ஸ்ரீ தத்தன் வேடம் பூண்ட ஆக்டர், ஒரு இந்துஸ்தானி தில்லானு பாடிக்கொண்டு பிரவேச மானுர்! இப்படிப்பட்ட உதாரணங்களைப் பெருக்க எனக்கு அவகாச முமில்லை மனமுமில்லை. சில கம்பெனிகளில் முக்கியமான ஆக்டர் கள் ரங்கத்தை விட்டுப் போகும்பொழுது ஏதாவது பாட்டைப் பாடிக்கொண்டு போகிற வழக்கமுண்டு! சதாரம் நாடகத்தில் சதா ரம் திருடனுல் அபகரிக்கப்பட்டு போனபின், துயின்றெழுந்த அவள் காதலனை கதாநாயகன் அவளைக் காணுமற் பாடி அழுது விட்டுப் போகும்பொழுது, ஒரு தில்லானுபாடி மறைந்ததைப் பார்த்திருக்கிறேன். குலேபகாவலி நாடகத்தில் தந்தையிடம் வரு கிற அவனது நான்கு குமாரர்களும், ஆரம்பத்தில் ஒவ்வொரு பாட் டைப் பாடிக்கொண்டு வருவது மன்றி, காட்சியை விட்டுப்போகும் பொழுதும் ஒவ்வொரு பாட்டைப்பாடிக்கொண்டு போனதை நான்

கேட்டிருக்கிறேன். இதில் இன்னொரு விசேஷம் என்னவென்றால், தமிழ் நாடகமாயிருந்த போதிலும் காட்சி ஆரம்பப் பாட்டுகளும் முடிவு பாட்டுகளும், எந்த பாஷையிலிருந்தாலும் பெரிதல்ல என்று எண்ணப்படுகிறது! தெலுங்கு, கன்னடம், ஹிந்துஸ்தானி, பாட்டு களெல்லாம் பாடுவதற்கு இவைகள்தான் ஏற்ற சந்தர்ப்பங்களாக எண்ணப்படுகின்றன. நாடகத்திற்கும் இப்பாட்டுகளுக்கும் என்னடா சம்பந்தம் என்று கேட்பார் கிடையாது பெரும்பாலும்! இவ்வாறு ஆக்டர்களே தாங்களாக சந்தர்ப்பங்களில்லாத பாட்டு களைப் பாடுவதன்றி, சபையோர்கள் காட்சியின் ஆரம்பத்திலோ, முடிவிலோ, நடுவிலோ, முக்கிய ஆக்டர்களைத் தாங்கள் விரும்பும் பாட்டுகளைப் பாடும்படி கேட்பது சாதாரணமாகி விட்டது! பாதுகா பட்டாபிஷேகத்தில், ஸ்ரீராமர் சீதையையும் லட்சுமணரையும் அழைத்துக்கொண்டு காட்டிற்குப் போகிற காட்சியாயிருக்கும், அதில் சபையோர் ஸ்ரீராமர் வேடம் பூண்ட ஆக்டரை "பூமாந்தும்" என்னும் ராமலிங்க சுவாமிகள் பாட்டைப் பாடும்படி கேட்பார்கள். சன்யாசி வேடம் பூண்ட ஆடவனோ ஸ்திரீயோ, ஏதாவது பதம்பாடும் படி கேட்கப்படுவார்; லட்சுமணனுக்கு இந்துஸ்தானி நன்றாய்ப் பாடத் தெரிந்தால், அதில் ஒரு டப்பா பாடும்படி ஆக்ஞாபிக்கப்படு வார். இந்த ஆக்டர்களெல்லாம் இவற்றைப்பாடித் தொலைக்கவேண் டும். சிலகாலமாக தேசியப்பாட்டுகளை கொஞ்சமேனும் சந்தர்ப்பமில் லாத இடங்களிலெல்லாம் பாடும்படி சபையார் கேட்கத் தலைப்பட் டிருக்கின்றனர் என்பது நாடகாபிமானிகள் யாவரும் அறிந்த விஷயமே; "காந்திப்பாட்டு" "மோதிலால் நேருப்பாட்டு" "சர்க்கா பாட்டு" முதலியன, அரிச்சந்திரன், நளன், ஸ்ரீராமர், ராவ ணன் முதலியோர் பாடியாகவேண்டும்! அத் தேசிய பாட்டுகளுக் காக நான் ஆட்சேபிக்கவில்லை, அவைகளைப் பாடுவதற்காக தேசிய நாடகங்களை எழுதி, அவற்றுள் சந்தர்பத்திற்கேற்றபடி அவைகளைப் பாடினால் மிகவும் ஒழுங்காயிருக்குமென்பது என்அபிப்பிராயம். கொஞ்சமேனும் சந்தர்ப்பமில்லாத இடங்களில் அவற்றைப் பாடுவ தற்குத்தான் நான் ஆட்சேபிக்கிறேன்.

சரியான சந்தர்ப்பங்களில் கூட, பாட்டுப் பாடும் விஷயத்தில் நாடக கம்பெனிகளில் நாம் கண்டிக்க வேண்டிய

சில ஆபாசங்கள் இருக்கின்றன. பெரிய சங்கீத வித்வான்கள், நாடக மேடையில் வேடம் பூண்டு வரும் பொழுது, பாடும் மார்க்கம் பெரும்பாலும் அடியில் வருமாறாகும். உள்ளே யிருந்து பாடிக்கொண்டுவந்தாலும் சரி, அல்லது மேடைக்கு வந்த பின் பாட ஆரம்பித்தாலும் சரி, உடனே நேராக ஹார் மோனியம் பெட்டி வைத்திருக்கும் பக்கம் போய் நின்று கொண்டு, அல்லது அப்பெட்டியின் மீது கையை வைத்துக் கொண்டு, சபையோரைப் பார்த்துப் பாடுவார்கள். முதலாவது இந்த ஹார்மோனியம் பெட்டியை மேடையின் மீது வைப்பதே தவ றாகும். மேடையில் நடக்கும் காட்சி ஏதாயிருந்தாலும் சரி, கானக மாயிருந்தாலும் சரி, வீதியாயிருந்தாலும் சரி, சமுத்திரமாயிருந் தாலும் சரி, கோயிலா யிருந்தாலும் சரி, ஸ்மசானமாயிருந்தாலும் சரி, அதன் மத்தியில் இந்த ஹார்மோனியப் பெட்டி எல்லோரு மறிய விளங்கும் ! இந்த ஹார்மோனியம் பெட்டி யிருக்க வேண்டிய இடம், ரங்கத்தின் பின்பக்கத்தில், தாழ்ந்த இடத்தில்—என்று நான் உறுதியாய்க் கூறக்கூடும். ஐரோப்பா முதலிய எந்த கண்டத் திலும், எந்த தேசத்திலும், இந்த ஹார்மோனியப் பெட்டியை இவ்வாறு பயிரங்கமாய் ரங்கத்தில் வைக்கும் வழக்கம் கிடையாது என்று உறுதியாய்க் கூறலாம். மேற்சொன்னபடி ரங்கத்தின் முன் பாக தாழ்ந்த இடத்தில் வைக்க வசதி யில்லாவிட்டால், மேடை யின் பேரில், சைட்படுதாக்கள் இருக்குமிடத்தில் மறைத்து வைப் பதே தகுதியாம். பாடும் ஆக்டருடைய சங்கீதத்திற்கு இது துணைக் கருவியாயிருக்க வேண்டுமே யொழிய முதற் கருவியாயிருக்கலா காது; இப்படி ஹார்மோனியம் பெட்டி மேடையின் மீது வைக்கப் படுவதற்கு முக்கியகாரணங்கள் இரண்டாயிருக்கலாம். ஒன்று, பாடும் ஆக்டர்களுக்கு சுருதி எடுப்பதற்கு சுலபமாயிருக்கலாம்; இரண்டு, இந்த ஹார்மோனியம் பெட்டியை வாசிக்கும் சங்கீத வித்வான் திறமையை சபையோர் அறியவேண்டும் என்றிருக்கலாம். எதுவாயிருந்தாலும் இதற்காக ரங்கத்தின் ஒழுங்கைக் கெடுப்பது மிகவும் விசனிக்கத் தக்கதே. ஏதோ பாடும் ஆக்டர்களுடைய சங்கீதத்திற்கு அனுசரணையா யிருக்கிறதென ரங்கத்தின் மீதே இப்பெட்டியை வைத்த போதிலும், நடிக்கும் ஆக்டர் அதனருகில் நின்று கொண்டும் அதன் பேரில் கையை வைத்துக் கொண்டும்

பாடுவானேன்? நடிக்கும் ஆக்டர் தான் பாட வேண்டியது தனி மொழியிலடங்கியதா யிருந்தால் சபையை நோக்கிப் பாடவேண்டும், அல்லது ரங்கத்திலிருக்கும் பிறிதொரு ஆக்டருடன் சம்பாஷிக்க வேண்டிய சந்தர்ப்பமா யிருந்தால், அந்த ஆக்டரை நோக்கிப் பாடவேண்டும்; இவ்விரண்டையும் விட்டு ஹார்மோனியம் வாசிக்கும் பாடகனை நோக்கி ஆக்டர் பாடுவதற்கு என்ன நியாயம் உண்டு? இதில் இன்னொரு வேடிக்கை யென்னவென்றால் சில ஆக்டர்கள், ரங்கத்திலிருக்கும் தாங்கள் சம்பாஷிக்க வேண்டிய மற்றொரு ஆக்டரைப் நோக்கிப் பாடாமல், இந்த ஹார்மோனியம் வாசிப்பவரை நோக்கியே பாட ஆரம்பித்து விடுகிறார்கள். இதில் இன்னும் வேடிக்கை என்னவென்றால், ஆக்டர் பாடவேண்டிய பாட்டு கதா நாயகன் தன் காதலியை நோக்கி வர்ணிக்கும் பாட்டாயிருக்கும்; அதை அவளைப்பார்த்துப் பாடாமல், ஹார்மோனியப் பெட்டி வாசிக்கும் ஒன்றரை முழம் தாடியைப் படைத்த மஸ்தான் சாயபுவை நோக்கி "மன மோஹன மானே!" என்று பாட ஆரம்பித்து விடுவார்! இந்த பெரும் ரசாபாசம் நமது தமிழ் நாடக மேடையை விட்டு அகலுமளவும் அதற்கு விமோசன மில்லை யென்பது என் நிச்சயமான அபிப்பிராயம்.

இப்படிப்பட்ட சங்கீதத்திலுள்ள மற்றொரு முக்கியமான குறையென்ன வெனில், சங்கீத வித்வான்களாகிய சில ஆக்டர்கள், தங்கள் பாட்டின் மத்தியில் ராக ஆலாபனை செய்துவிடுவதேயாம். கேவலம் சங்கீதக் கச்சேரியில் சங்கீத வித்வான்கள், தங்கள் திறமையைக் காட்ட ராக ஆலாபனை முதலியன செய்ய வேண்டியது அதி அவசியம்தான். நாடகமேடையில் அது எப்படி பொருத்தமாயிருக்கும் என்பதை அவர்கள் சற்றும் கவனிப்பதில்லை "காமி சத்யபாமா, கதவைத்திறவாய்!" என்னும் பாட்டாயிருக்கும்; அதைப்பாடும் நமது பாகவதர், நடுவில் ராக ஆலாபனை செய்ய ஆரம்பித்து, அதற்காக பத்து நிமிஷம் செலவழிப்பார்! இதில் நடுவில் தானம் ரவை ஜாதிகள் எல்லாம் வந்து விழும்; கடைசியாக ச ரி க ம ப த நி ச என்று ஸ்வரம் பாட ஆரம்பித்து விடுவார் இப்படி ஆலாபனை செய்வதற்கும் ஸ்வரம் பாடுவதற்கும், இது தக்க இடமா, மேற் பூண்ட வேடத்திற்குத் தகுதியா, என்று

கொஞ்சமேனும் கவனிப்பது கிடையாது. இந்த ரசாபாசமும் சீக்கிரம் நமது நாடக மேடையை விட்டு விலகினுலொழிய நமது தென்னிந்தியா நாடகமேடை சிறப்புற்றோங்காது என்பது என் ஸ்திரமான அபிப்பிராயம். நமது சங்கீத வித்வான்களெல்லாம் சங்கீதக் கச்சேரிகள் வைக்கட்டும், அவைகளில் தங்களுடைய சங்கீதத் திறமையெல்லாம், தானம் பல்லவி பாடுவதிலும், ராக ஆலாபனை செய்வதிலும், ஸ்வரம் பாடுவதிலும் காட்டட்டும்; நாமெல்லாம் சுகமாய் மூன்று நான்கு மணி காலம் கேட்போம். மேடையின் மீது வேடம் பூண்டு வருங்கால், பாடவேண்டிய பாட்டுகளைத் தக்க படியும் முக அபிநயத்துடனும் அவ்வேடத்திற்குரியபடியும் பாடட்டும். ஸ்ரீ கிருஷ்ணன் சத்யபாமையைக் குறித்து வேண்டும் பொழுது, சங்கீதக் கச்சேரி பண்ணவில்லை என்பதை கவனிப்பார்களாக! இனி மேலாவது நமது சிறந்த ஆக்டர்கள் நாடக மேடைக் குரிய சங்கீதத்திற்கும் சங்கீதக் கச்சேரிக்குரிய சங்கீதத்திற்கும் உள்ள பேதத்தை நன்கு அறிந்து கொண்டு நடப்பார்களாக!

மேற்குறித்தபடி சங்கீதத்திற்கே மிகவும் அதிகமாக இடங் கொடுப்பதினுல் தற்கால தமிழ் நாடக மேடையில் உண்டாகும் இன்னொரு குறை யென்னவெனில், போலீஸ் சட்டப்படி நாடக மானது இத்தனை மணிக்குள்ளாக இரவில் முடியவேண்டும் என்று ஏற்படுத்தப்பட்ட காலத்திற்குள்ளாக முற்றுபெருததேயாம். அநேக நாடகங்களில் சங்கீதத்திற்கு அதிக காலம் கொடுப்பதினுல், நாடகத்தை பாதிகூட முடிக்காமல், இரவு இரண்டு மணிக் குள்ளாக அறைகுறையாக முடிக்கவேண்டி வருகிறது. ஒரு உதாரணமாக, சாதாரணமாக எல்லா நாடக கம்பெனிகளும் நடித்து வருகின்ற "வள்ளி மணம்" என்னும் நாடகத்தில் வள்ளிக்கும் வேடனுக்கும் தர்க்கம் $1\frac{1}{2}$ மணி நேரம்; பிறகு வள்ளிக்கும் கபட வயோதிக சன்யாசிக்கும் தர்க்கம் இன்னொரு $1\frac{1}{2}$ மணி சாவகாசம் பூர்வகதையாகிய வள்ளிக்கும் நாரதருக்கும் தர்க்கம் ஒரு $1\frac{1}{2}$ மணி; இப்படி பாடிக் கொண்டே போய்முடிவில் கொட்டகை விளக்கை யவிக்கவேண்டியகாலம் வரும்பொழுது, நாடகக்கதை பூர்த்தியாகாமலே முடிக்க வேண்டிவந்திருப்பதை நான் பன் முறை பார்த்திருக் கிறேன். சில நாடக கம்பெனிகளில் நாடகக் கதையை எப்படியாவது

முடிக்கவேண்டு மென்று எண்ணினவர்களாய் கடைசி காட்சிகளை பரபரவென்று அதி வேகமாய் அறைகுறையாக ஆடி முடிக்கின்றனர். இதுவும் தவறாகும். முன்னதாகவே நாடகம் ஆட நான்கோ, ஐந்தோ மணி சாவகாச மிருந்தால், அதற்குத் தக்கபடி காட்சிகளை ஏற்படுத் திக்கொண்டு, ஒத்திகையிலே இவ்வளவு நேரம் பிடிக்கிறதென்று ஆராய்ந்தறிந்து, அதற்குத் தக்கபடி அநாவசியமான பாகங்களை யெல்லாம் குறைக்கி, முக்கியமான காட்சிகள் ஒன்றையும் விடாது ஏற்பாடு செய்து கொண்டால், இம்மாதிரியான குறை நாடகங்களில் வராது.

நான் தற்கால தமிழ் நாடகக் கம்பெனிகளில் கவனித்த இன் னொரு குறை யென்னவென்றால் பெரும்பாலும் அக்கம்பெனிகள் போட்ட நாடகங்களையே திருப்பித் திருப்பிப் போட்டுக்கொண்டி ருப்பதாம். சென்ற 50 வருடங்களாக தமிழ் நாடக மேடையில் நாடகக் கம்பெனிகளால் ஆடப்பட்ட நாடகங்களை ஒருவாறு அட்ட வணை போட்டுப் பார்த்தேன். என் கணக்கில் சுமார் 75 நாடகங்கள் தான் கிட்டின; இவற்றுள்ளும் சுமார் 25 நாடகங்கள் அடிக்கடி ஆடப்படுகின்றன; இந்த 25 நாடகங்களுக்குள்ளும் சுமார் 10 அல் லது பன்னிரண்டு எப்பொழுது பார்த்தாலும் திருப்பித் திருப்பி ஆடப்படுகின்றன; இவை சதாரம், வள்ளி, அரிச்சந்திரா, பவழக் கொடி, கண்டிராஜா, நந்தனார், நல்லதங்காள், ஞானசௌந்தரி, கோவலன், அல்லி அர்ஜுனா, கிருஷ்ண லீலா, குமேபைகாவலி முதலி யனவாம். இங்கிலாந்து முதலிய தேசங்களில் வருஷாவாரியில் ஆயிரக்கணக்கான நூதன நாடகங்கள் ஆடப்பட்டு வருகின்றன வென்றே சொல்லலாம். நமது தமிழ் நாடக மேடையிலோ ஒரு வருஷத்திற்கு இரண்டு விகிதம் கூட நூதன நாடகங்கள் கிடைப் பது அரிதென்றே கூறவேண்டும். ஹைதர் காலத்தில் ஆடிய அரிச்சந்திர நாடகமும், வள்ளி நாடகமுமே இன்னமும் நாம் ஆடிக்கொண்டிருந்தால் நமது நாடகமேடை எவ்வாறு விருத்தி யடையும்? இந்த நாடகங்களை நான் இழிவாகக் கூறவில்லை. நான் எழுதி அச்சிட்ட நாடகங்களுள் இவைகளும் உட்பட்டிருக்கின்றன; நான் சொல்லவந்த தென்னவெனில், நாடக கம்பெனிகளெல்லாம் இப்படிப்பட்ட பழய நாடகங்களை ஆடுவதுடன், அடிக்கடி புதிய

புதிய நாடகங்களையும் ஆடத்தலைப்படுவார்களாயின் தென்னிந்தியா விலுள்ள தமிழ் நாடக மேடை சீக்கிரத்தில் உன்னத ஸ்திதியை யடையுமென்பதே.

மேற் சொன்னபடி பழய நாடகங்களையே ஆடுவதிலும் அவை களை மனம்போனபடியெல்லாம் இக்கம்பெனிகள் மாற்றி ஆடுவது மற்றொரு நிவர்த்திக்க வேண்டிய குறையாம். இதற்கு ஒரு உதா ரணமாக "கோவலன்" சரித்திரத்தை எடுத்துக் கொள்ளுகிறேன். இது சிலப்பதிகாரம் என்னும் ஐம்பெரும் ஜைன காப்பியக் கதை யாகும். இதன் நூலாசிரியர் எழுதியபடி கதையானது மிகச் சிறந்த தாகும். அதை யெல்லாம் முற்றிலும் மாற்றி இப்பொழுது மிகவும் ஆபாசமாக ஆடப்பட்டு வருகிறது. சில நாடக கம்பெனிகள் "கோவலன்" எனும் கதா நாயகனுடைய பெயரையும் சரியாக அறி யாது "கோவிலன்" என்று அச்சடித்து விடுகிறார்கள்! இந்நாட கத்தை ஒரு முறை பார்க்கவேண்டுமென்று ஒரு நண்பரால் அழைத்துக்கொண்டு போகப்பட்ட நமது நல்லாசிரியர் மஹா மஹோ பாத்யாயர் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் முதல் ஒன் றிரண்டு காட்சிகளைப் பார்த்தவுடன் பூர்வீக கதையானது மிகவும் மாற்றப்பட்டதைக் கண்டு மனம் பொறாதவராய், நாடகசாலையை விட்டு விட்டுத் திரும்பி வந்தனர் என்பதை நான் அறிவேன். தற்காலம் நாடக கம்பெனிகளால் ஆடப்படும் இக்கதையின் ஓர் காட்சியில், ஓர் பெண் விக்கிரஹமானது ஒரு துடப்பக்கட்டையால் கதா நாயகனை அடிப்பதுபோல் காட்டப்படுகிறது! சிலப்பதிகார நூலாசிரியரது அருவம் அதைக் காணுமாயின் கண்ணீர் விட்டி ருக்குமென்பது திண்ணம். அன்றியும் கதா நாயகி காளியாக வரும் காட்சிகள் பூர்வகதைக்கு மிகவும் மாறுபட்டனவாம். தற் காலத்தில் நடிக்கப்படும் இக்கதையைச் சீர்திருத்த வேண்டிய குற்றங்களை எடுத் துக் கூறுவதென்றால் மணல் சோற்றில் கல் பொறுக்குவதொக்கும். மேற் சொன்னபடியே, தாராசசாங்கம், குசலவ நாடகம், முதலியன வைகளிலும் புராதனமான கதைகளிலில்லாத சில ஆபாசங்களை நுழைத்திருக்கின்றனர். இனிமேலாவது நாடக கம்பெனிகள் புராண இதிகாச கதைகளை ஆடும்பொழுதும், பூர்வீக காவியங் களை நாடக ரூபமாக ஆடும் பொழுதும், புதிய ஆபாசங்களை அவை களுடன் சேர்க்காது நடத்துவார்களெனக் கோருகிறேன்.

பெரும்பாலும் தற்காலத்திய நாடக கம்பெனிகள் பழைய நாடகங்களையே திருப்பித் திருப்பி ஆடுகிறார்கள், புதிய நாடகங்களை எடுத்துக் கொள்வதில்லையென்று மேலே கூறினபொழுது, காலஞ் சென்ற கன்னையாவின் நாடக கம்பெனியையும் மதுரைபாலவினோத சபையையும் நான் விலக்கிக் கூறியிருக்கவேண்டும். மற்ற நாடக கம்பெனிகள் சொந்தக்காரர்களைப் போல் அல்லாமல் கன்னையா, புதிய புதிய நாடகங்களை தன் கம்பெனியை கொண்டு நடத்தி வந்த சமாசாரம் தென் இந்தியா முழுவதும் அறிந்த விஷயமே. ஸ்ரீ கிருஷ்ண லீலை, (புதிய வழியில்) தசாவதாரம், ராமானுஜர் வைபவம், ஆண்டாள் திருமணம், பகவத்கீதை முதலிய நாடகங்களை, ஏராளமான பொருள் செலவழித்து மிகவிமரிசையாக நடத்திய சமாசாரம் தென் இந்தியாவிலுள்ள ஆண் பெண் அடங்கலும் அறிந்த விஷயமே. அவ்வாறு மேலும் மேலும் புதிய புதிய நாடகங்களை ஆடி வந்ததினால்தான் கன்னையா தான் செய்து வந்த பல தர்ம கைங்கர்யங்களுக்கு பெரும் பொருளைப் பெற்றனர் என்பதும் திண்ணம்; நாடகாபிமானிகளும் அந்நாடகங்களைக் கண்டு களிப்புற்றனர் என்பதும் திண்ணம். இச் சந்தர்ப்பத்தில் கன்னையா, ஆசாரியர் திருவடியைச் சேருமுன் தயார் செய்த 'பகவத் கீதை' என்னும் நாடகத்தைப் பற்றி எனது அபிப்பிராயத்தை இங்கு கொஞ்சம் எழுத விரும்புகிறேன்.

பகவத்கீதையை நாடக ரூபமாக ஆட கன்னையா ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார் என்று நான் கேள்விபட்ட பொழுது இதை எவ்வாறு நாடகமாக ஆட முடியும், என்று மிகவும் சந்தேகமுற்றேன். பிறகு அந்நாடகத்தை அவர் வேண்டு கோளின் பேரில் நான் போய்க் கண்ணுற்ற போது, ஒன்றிரண்டு காட்சிகள் பொருத்தமாயில்லை என்று நான் அபிப்பிராயப் பட்டபோதிலும் மற்ற பாகங்களெல்லாம், எனக்கு அத்யந்த ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் தந்தன. இப்புண்ணியவான் அந்நாடகத்தின் கடைசி ஒத்திகையை மட்டும் பார்த்து நாடகம் நிகழ்ந்த பொழுது ஒரு முறையேனும் பாராது காலகதியை யடைந்தது மிகவும் விசனிக்க தக்க விஷயம். இவர் இன்னும் சில வருஷங்கள் உயிரோடிருந்திருப் பாராயின் தென் இந்தியா நாடக மேடை இன்னும் அபிவிர்த்தி யடைந்திருக்கு மென்பதற்குச் சந்தேகமில்லை. அவர் அகால மா

ணத்தை யடைந்தது தமிழ் நாடகத்தின் துர்ப்பாக்கியமே! மதுரை பால விநோத சபையாரும் புதிய புதிய நாடகங்களை தற்காலம் ஆடி வருவது மிகவும் மெச்சத் தக்கதே.

இனி மேலாவது நாடக கம்பெனிகளில், சென்ற இருபது வருடங்களாக அச்சிடப்பட்டு வரும் புதிய தமிழ் நாடகங்களுக்குள் தங்களுக்கு உவப்பைத் தருவனவற்றைப் பொறுக்கி யெடுத்து, ஆட ஆரம்பிப்பார்களாக. இவ்வாறு தற்காலம் அச்சிடப்பட்டிருக்கும் தமிழ் நாடகங்களை ஆடுவதினால், நாடக கம்பெனிகளில் தற்கால மிருக்கும் இன்னொரு பெருங் குறை நீங்கும்; அதாவது தற்போது நாடக கம்பெனிகளிலுள்ள நடிகர்கள், தாங்கள் பாடவேண்டிய பாட்டுகளை மாத்திரம் எழுதி உருப்போட்டுக் கொண்டு, தாங்கள் பேசவேண்டிய வசனத்தை யெல்லாம் தங்கள் மனம் போன வழி பேசும் கெட்ட வழக்கம் குறைந்து போம். இந்த குற்றமானது பெரும்பாலும் புராண கதைகளை ஆடும் பொழுதுதான் அதிக மாய்க் காணப்படுகிறது. "துரௌபதி வஸ்திராபஹரணம்" என்னும் புராணக் கதையை யெடுத்துக் கொண்டு, நடிகர்கள் எல்லாம் அதில் பேசவேண்டிய வசனத்தை தங்கள் மனம் போன வழி யெல்லாம் பேசுகிறார்கள்; இவ்விதமே மற்ற புராண நாடகங்களி லும்; ஒரு நடிகன் எவ்வளவுதான் தமிழில் வல்லமை வாய்ந்தவனா யிருந்த போதிலும் சமயோசிதமாய் மேடையின் மீது ஏறிய பின் தான்மேற்பூண்ட பாத்திரத்திற் கேற்றபடி வசனத்தை பேசுவ தென்றால் சுலபமல்ல. அன்றியும் தன்னுடன் நடிக்க வேண்டிய பாத்திரமோ, பாத்திரங்களோ, இன்ன சந்தர்ப்பத்தில் இன்ன பேசப் போகிறார்கள், தன்னை இன்ன கேள்விகள் கேட்கப் போகி றார்கள், என்று தெரியாமலிருக்கும் பொழுது திடீரென்று சமயத் திற் கேற்றபடி பதில் உரைப்பது மிகவும் கடினமாம். முன்னமே தான் பேசவேண்டிய வசனத்தை யெல்லாம் ஒத்திகை செய்து பாராவிட்டால் அகஸ்மாத்தாய்ப் பேசவேண்டிவந்த வார்த்தை களுக்கு இன்ன அபிநய மிருக்க வேண்டும் என்பது சுலபமாய் வராது. ஆகவே பூர்வீக வழக்கமாகிய சமயோசிதமாய்ப் பேசும் வழக்கத்தை அறவேவிட்டு இனியாவது நமது நாடக கம்பெனி களிலுள்ள ஆக்டர்கள் தாங்கள் பேச வேண்டிய வசனத்தை அச்

சிட்ட புஸ்தகங்களிலிருந்தாவது, அல்லது, முன்னதாக அவற்றை எழுதிப் பாடம் செய்து ஒத்திகை செய்து பார்த்தாவது பிறகே நாடக மேடையின் மீது அவ்வசனங்களை உபயோகிப்பார்களாக.

நாடக கம்பெனிகளிலிருந்து ஒழிக்கவேண்டிய மற்றொரு கெட்ட வழக்கம் என்னவென்றால், பின்பாட்டு என்பதாம்—அதாவது ரங்கத்தின் மீதிலுள்ள ஆக்டர் ஒரு பாட்டில் ஒரு அடியைப் பாடி முடித்தவுடன், சைட் படுதாக்களிருக்குமிடமிருந்து, மற்றவர்கள், பாடின அடியை மறுபடியும் பாடுவதேயாம். இது பூர்வீக காலத்தில் ஏதோ சில காரணங்களால் சற்று பொருத்தமானதாயிருந்த போதிலும், தற்கால நாகரீகத்திற்கு ஒத்ததன்று. இதனால் நான் அறிந்த வரையில் ஒரு லாபம்தான் உண்டு, அதாவது ஒரு ஆக்டர் தான் பாட வேண்டிய பாட்டில் ஒரு அடியைப் பாடியானவுடன், பின்பாட்டு ஆரம்பித்தால், அந்த ஆக்டர் சற்று சிரமபரிகாரமாய் மேடையின் மீது ஒன்றும் செய்யாமல் நிற்கலாம்! இதனாலுண்டாகும் ரசாபாசங்கள் பல, அவற்றுள் சில வற்றை மாத்திரம் இங்கு எடுத்து எழுதுகிறேன். முதலாவது, பின்பாட்டுப் பாடப்படும் பொழுது, ரங்கத்திலிருக்கும் ஆக்டர் சும்மா விழித்துக் கொண்டிருக்க வேண்டி வருகிறது; அன்றேல் முகம் கை, முதலியவற்றால் ஆங்கிலத்தில் பான்டோமைம்(Pantomime)என்னும் அபிநயம் பிடிக்கவேண்டி வருகிறது; ஒரே வாக்கியத்திற்கு இரண்டு தரம் அபிநயம் பிடிக்கவேண்டியவனாகிறான்; செய்ததையே செய்யாது, இரண்டுவிதமாக அபிநயம் பிடிக்கத்தக்கவர்கள் சிலரே. இதைவிட மேலான கஷ்டமென்னவெனில், பின்பாட்டுக் காரன் சங்கீதத்தில் சிறந்தவனாயிருந்தால், ஆக்டர் மேடையின்மீது போடும் சங்கதிகளை விட, இவன் அதிக சங்கதிகள் போட்டு பாட ஆரம்பித்துவிடுவான்; அல்லது இருவரும் சங்கீதவித்வான்களாயிருந்தால், சங்கதிகள் போட்டு பாடுவதில் போட்டா போட்டியாய் முடியும்! இது சங்கீதப் பிரியர்களுக்கு கொஞ்சம் வினோதத்தைத் தந்தபோதிலும் நாடகாபிமானிகளுக்கு மனோ வருத்தத்தை யுண்டுபண்ணுமென்பதற்குத் தடையில்லை. சங்கிதக் கச்சேரியில் இரண்டு சங்கீத வித்வான்கள் பல்லவி பாடுவதில் போட்டி போடுவது போலிருக்குமேயொழிய, கேவலம் நாடகமேடைக்குப் பொருத்தமானதன்று.

மேலும் நாடகமேடையின் மீது பாட்டுகள் பாடும் பொழுது 'ஸ்வரம்' பாடுவது கொஞ்சமேனும் அடுக்காதது என்பதை இங்குவாசிக்கும் என்து நண்பர்களுக்கு நினைப்பூட்டுகிறேன்.

தற்காலத்தில் தென் இந்தியா நாடக மேடையில் முக்கியமாக, நாடக கம்பெனிகள் நடத்தும் நாடகங்களில், மற்றொரு குறையுண்டு, அதாவது சில முக்கியமான ஆக்டர்கள் நாடகத்தின் இடையில், ரங்கத்தின் மீது காட்சி நடந்து கொண்டேயிருக்கும் பொழுது, பாட்டுகளின் மத்தியில், சைட்படுதாவருகிற் போய் தாகத்திற்குச் சாப்பிட்டு வருகிறதேயாம்! தாகத்திற்கு என்று பொதுவாகக் குறிப்பிட்டேன். அது, வென்னீர் சாப்பிடுகிறார்களோ அல்லது பால் சாப்பிடுகிறார்களோ, அல்லது ஓயின் சாராயம் முதலிய வற்றைச் சாப்பிடுகிறார்களோ, ஈசன் அறிவார். கடைசி பானத்தைச் சாப்பிடுவதினால் உண்டாகும் கெடுதிகளைப் பற்றி எனது நண்பர்களுக்கு முன்பே அறிவித்திருக்கிறேன். மற்ற பானங்களைக் கூட காட்சியின் மத்தியில் ரங்கத்தை விட்டு நீங்கி, சைட்படுதாவண்டைப்போய் அருந்திவிட்டுத் திரும்பி வருதல், மிகவும் தவறாகும். முக்கிய ஆக்டர்கள் இவ்வாறு செய்யும்பொழுது ரங்கத்திலிருக்கும் மற்ற ஆக்டர்கள், "அவல் மென்று கொண்டிருக்க" வேண்டிவரும். இது மிகவும் ரசா பாசமாம்; நாடக லட்சணத்திற்கு மிகவும் விருத்தமாம்; இனியாவது நமது நாடக கம்பெனிகளின் ஆக்டர்கள் இந்த துர்வழக்கத்தை விட்டொழிவார்களாக!

மேற் குறித்த சில குற்றங்கள் பெரும்பாலும் ஆமெட்டூர் (amateur) ஆக்டர்களிடம் இல்லை யென்று நான் சந்தோஷத்துடன் இங்கு எழுத வேண்டியவனாயிருக்கிறேன்.

மேற் குறித்த குறைகளையெல்லாம் நீக்கினால் தான், நமது நாடகங்கள் முன்னேற்ற மடையக் கூடுமென்பதற்குச் சந்தேகமில்லை.

# ஸ்திரீ ராஜ்யம்

## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| அஸ்வகர்ணன் | .... | .... ஓர் ஏழைப் பிராம்மணன் |
| செல்லத்தம்மாள் | ... | ... அவனது மனைவி |
| பட்டாபிராமன் | .... | ... அவன் மைத்துனன் |

## முதல் அங்கம்

### முதற் காட்சி

இடம்—அஸ்வகர்ணன் வீட்டின் புழக்கடை.

காலம்—அதிகாலை.

அ. உம்!—இத்தனி நாளா இந்த பெரிய சனியனை கட்டிகினு அழவேண்டி வந்ததே இன்னு இருந்தா—இப்போ—என்னடா இண்ணு, பக்கத்து ஆத்துலே இந்த குட்டி சனி ஒண்ணு வந்து சேர்ந்துது! நானு—இவ சொல்றாளே இண்ணு—ஏதாவது வேலே செய்ய ஆரம்பிச்சா—அதுக்கெல்லாம் பாட்டு கட்டிபாட ஆரம்பிக்குது!—இந்த தொல்லே யெல்லாம் ஒழிச்சூட்டு—மஹாராஜா அரமனைக் கெதிரிலே இருக்கிற சத்திரத்திலே வந்தவாளுக்கெல்லாம் சாப்பாடு போடராளாம்—ஒருத்தருக்கும் தெரியாமே அங்கே போயி—ஆயி மிண்ணு சாப்பிட்டு விட்டு விழுந்து கிடக்கிரேன்! அவள்—ஸ்நானம் பண்ணிவிட்டு வர்ரத்துக்குள்ளோ நாம் பூடணும்— [மெல்ல புழக்கடைக் கதவைத் திறக்கிறான்.]

அதன் வழியாக வெளியிலிருந்து அஸ்வகர்ணன் மனைவி வருகிறாள்.

அ. ம. ஓய்! பிராம்மணா!—பொழக்கடெக் கதெவெ தெறந்துகினு எங்கே போகப் பாக்கிறீர்?

அ. இல்லேயெடி! மெல்லப்பேசு—பக்கத்து ஆத்துப்பய முழிச்சிகப் போரான்!—அவன் தூங்கராரு இல்லேயா இண்ணு பாக்கப் போனேன்—

அ. ம. அதெ நீர் பாப்பானேன்?

அ. நோக்குதான்—நேத்து சொன்னேனே!—நேத்து நீ சொன்னேயே இண்ணு—நானு சாணி தட்டிரு—அதுக்கு பாட்டு கட்டி பாடிரூன் அந்தப் பயல்!—என்னே எழுத்தாளி பண்ணி!—அத்தொட்டு இன்னேக்கு அவன் தூங்கி எழுந்திருக்காத முன்னே அந்த வேலெயே முடிச்சூடலாமிண்ணு—அவன் தூங்கராரு இல்லேயா இண்ணு பாக்கப் புறப்பட்டேன்.

அ. ம. என்ரு, விந்தையாயிருக்கு! ஏதோ கொழுந்தெ வெளேயாடிரு—உமக்கு அதுக்கு கோவம் வந்தூட்டுதோ?

அ. கொழுந்தெ வெளயாடராரு? பாட்டல்லவோ பாடரான்—ஒவ்வொண்ணுத்துக்கும்!—

அ. ம. பாட்டு பாடரு, தப்பென்ரு அதுலே?—அவனுக்கு நல்ல சாரீரமாச்சே!

அ. அதுக்குக் கொரச்சலில்லே!—அவன் என்ரு பாடரான் இண்ணு கேட்டா நோக்குத் தெரியும்!

அ. ம. ஓமக்குத்தான் சங்கீதம் இண்ரு சுட்டுப் போட்டாலும் தெரியாது—அத்தொட்டு அவன் பாடிரு—ஓமக்கு வயத்தெரிச்சலா இருக்கிராப் போலே இருக்கு!—கிடக்கட்டும்—சீக்கிரம் அந்த சாணியே தட்டி விடும்—நாழியாரது!

[முன்கட்டுக்குப் போகிரூள்.]

அ. பரமேஸ்வரா! பரமேஸ்வரா! தலேவிதி! தலேவிதி!—

[அங்கிருக்கும் சாணியை எடுத்துத் தட்ட ஆரம்பிக்கிரூன்.]

**பட்டாபிராமன்** சுவற்றின் பேரில் ஏறிப்பார்க்கிரூன்.

**ராகம்—மாயாமாளவகௌளம்—தாளம்—ஆதி.**

ப. [பாடுகிரூன்] சா—ரீ—கா—மா—பா—தா—நீ—சா!

அ. [உரக்க] அடியே! அடியே! இஙம்கவா.

அஸ்வகர்ணன் மனைவி வருகிறாள்.

அ. ம. ஏன் அப்படி கத்தரீரே?

அ. உன் தம்பி பாடரத்தே கேளு.

ப. [பாடுகிறான்] ச—ரி—க—ம—ப—த—நி—சா!

அ. ம. ஏதோ சரளிவரிசெ அப்யாசம் பண்ரா—அதுக்கென்ன?

அ. சரளி வரிசையா? இன்னும் கேளு—

ப. [பாடுகிறான்] சாணி—த—ப—மா!—

அ. ம. ஸ்வரம் பாடரான்—அதிலென்ன தப்பு?

அ. நன்னா கேளேன்!

ப. சாணி—தப்பம்மா—நீசாணி—தப்பப்பா! நீ தான் சாணி தப்பம்மா! அப்பப்பா—நீ தான்—சாணி தப்பப்பா!

அ. கேட்டையாடி! இனிமேலே இந்த வேலே செய்யவே மாட்டேன்!— [சாணி வைத்திருந்த கூடையை கீழே போடுகிறான்; பட்டாபிராமன் மறைந்துக் கொள்ளுகிறான்.]

அ. ம. ஏதோ கொழுந்தெ வெளையடினா—அதுக்கு ஒமக்கு இவ்வளவு கோபமேன்?—போனா போவுது—மித்தமெல்லாம் சாணியாக்கி னீரே—சாணி கூடையை கீழேபோட்டு!—அந்த துடப்பத்தே யெடுத்து கொஞ்சம் சுத்தி பண்ணிடும். [உள்ளே போகிறாள்.]

அ. அந்த பய—பூட்டானா!—
[துடப்பக் கட்டையை யெடுத்துக்கொண்டு பெருக்குகிறான்.]

ப. [சுவற்றின் மீது தலையை நீட்டி பார்த்து] ஓகோ! [பாடுகிறான்.]

ராகம்—பந்துவராளி—தாளம்—ரூபகம்.

சந்தணம் புனுகு, பூசினகையினாலே
சாணியைத் தட்டினது போதாதென்று
தள்ளாடி தள்ளாடி பெண்டாட்டிக்கு பயந்து
துடப்பத்தைக் கையிலேந்தி பெருக்கும் அழகைப்பாரு!

அ. அடியே! அடியே!

அஸ்வகர்ணன் மனைவி வருகிறாள்.

கேட்டயாடி இந்தப் பாட்டே!

அ. ம. அதைக் கேட்டுதான் நான் வந்தேன், நன்னா பாடரானே! இந்தப் பாட்டே எங்கேயோ கேட்ட மாதிரி இருக்குது! —அம்பி, இது என்ன பாட்டுடா இது?

ப. இது அரிச்சந்திர விலாசத்திலே—சந்திரமதி—காலகண்டையர் வீட்டிலே பெருக்கும் போது பாடர பாட்டு.

அ. ம. நன்னா யிருக்குது—இன்னொரு தரம் பாடு—கேட்போம்.

அ. சரிதான்!

ப. [மறுபடியும் அப்பாட்டைப் பாடுகிறான்.]

அ. ஏண்டா பையா? நீ சும்மா யிருக்கமாட்டே?

ப. இல்லே அத்தான்!—நீங்கள் சந்திரமதி வேஷம் போட்டுகினு இந்த பாட்டே பாடணுங் கண்ணு, நன்னா யிருக்கும்—நான் வேணுமிண்ணா கத்துதாரேன்! துடப்பத்தால் பெருக்க நீங்க தான் கத்துகினீரே.

அ. கேட்டையாடி அதனப் பிரசங்கியே? எல்லாம் உன்னாலே வருது! இனிமேலே இந்தக் கையாலே துடப்பத்தெ நான் தொட்டா—நான் ஒரு பொம்பளையல்லா!

ப. சரியா சொன்னீங்க அத்தான்! [நகைக்கிறான்.]

அ. பாத்தையாடி—நான் ஏதோ வாய்தவறி—

ப. சரியா சொல்லி வுட்டாறு! [மறைகிறான்.]

அ. அடி—உன்னே வேண்டிக்ரேன்—இனிமேலே இந்த பெருக்கிற வேலே கிறுக்கிற வேலே—எனக்கு வைக்காதேடி—
[கண்ணைத் துடைத்துக் கொள்ளுகிறான்.]

அ. ம. இல்லெ! இல்லே!—நீர் துக்கப்படாதீர்! இந்த புடவையே மாத்திரம் கொஞ்சம் தோச்சிப் போட்டுடுங்க—அந்த சாணி கூடையெ கோபத்திலே நீங்க கீழே எறிஞ்சபோது—அந்த சாணியெல்லாம் அதுலே தெரிச்சிருக்குது பாருங்க!

அ. அடி—இப்பவே நான் சொன்னேன்—இதுக்கு ஏதாவது அந்தப் பய பாட்டு கீட்டு பாடினீங்கே—நான் செய்யமாட்டேன்.

அ. ம. இதுக் கென்னு பாடரது!— எதுக்கும், அவனே கேட்டிடரேன் அடே அம்பி!—அம்பி!

**பட்டாபிராமன்** சுவற்றின் பேரில் தலையை நீட்டுகிறான்.

ப. ஏன் அக்கா ?

அ. ம. துணி தோய்க்கிறத்துக்கு—ஏதாவது பாட்டு இருக்குதாடா —அரிச்சந்திர நாடகத்திலே ?

ப. இல்லவே இல்லெ அக்கா !—ஏன் கேக்கரீர் ?

அ. ம. இல்லே—உங்க அத்தான் கோவிச்சிக்கராரு—அவரு துணி தோச்சா—நீ ஏதாவது பாடப்போரே இண்ணு—அப்படியெல்லாம் ஒண்ணும் இராது, நீங்க பயப்படாதெங்க இன்னு சொன்னேன்—அதுக்காகத்தான் கேட்டேன்.

ப. என்ன அக்கா, நீ இந்த கேள்வி கேக்கரையே! அரிச்சந்திர விலாசத்திலே, சந்திரமதி துணி தோய்ச்சா இண்ணு எங்கேயாவது எழுதி யிருக்குதா ?

அ. ம. சரிதான் நீ போ. [பட்டாபி மறைகிறான்.]
—நீர் உம் வேலெயே பாரும்.

அ. ஏண்டி ? நான் பொடவெயெ தோய்க்கப்போரது அவனுக்கு எங்கே தெரியாமே யிருக்குதோ இண்ணு—அவனே கூப்பிட்டு சொல்லி வைச்சையோ ?

அ. ம. அதெல்லாம் இல்லே—உங்க—சந்தேக நிவர்த்திக்காக அவனே கூட்பிட்டு கேட்டேன்—சீக்கிரம் புடவையெ தோய்ச்சி உலரப் போடும்.

[போகிறாள்; அஸ்வகர்ணன் புடவையைத் தப்ப ஆரம்பிக்கிறான்.]

பக்கத்து வீட்டிலிருந்து கிராமபோனில் "வண்ணான் வந்தானே" பாட்டு கேட்கிறது.

அ. [துணி தப்புவதை நிறுத்திவிட்டு; முன்கட்டு வாசல் கதவண்டைப் போய் மெல்ல] அடி அடி! இங்கே மெல்ல வா !

**அஸ்வகர்ணன் மனைவி** வர, அவளை அழைத்துக்கொண்டு வந்து சுவற்றண்டை நின்று

கேட்டையா, அந்த துஷ்டப்பய என்னபாட்டு பாடரான் இண்ணு ?

அ. ம. ஓய்! பிராம்மணா! ஓமக்கு எப்பப்பாத்தாலும் அவன் பேர்லே சந்தேகம் தான்! அவன் கொரலா அது? நன்ருய்க் கேட்டுப் பாரும்.

அ. அவன் பாடாப் போனா என்ன?—இது என்னமோ—சத்தி—பாடுதே! பட்டணம் போனா—கிராமபோனா! அத்தெ பாடச் சொல்லி யிருக்கரான்.

அ. ம. அது பாடனா ஓமக்கு என்ன கெட்டு போச்சி?

அ. அது என்ன பாட்டு கேளு?

அ. ம. எனக் கொண்ணும் தெரியலேயே.

அ. தெரியலேயா? நன்னா உற்று கேளு.

அ. ம. எனக்கு அர்த்த மாகலே—அடே அம்பி! [உரக்க] அது என்னதுடா பாடுதே?

ப. [சுவற்றின் பேரில் தலையை நீட்டி] கிராமபோன் அக்கா.

அ. ம. என்ன பாட்டு பாடுது?

ப. வண்ணான் பாட்டு பாடுது!

அ. இப்பொ தெரிஞ்சுதா!—நான் துணிதப்பரேன் இண்ணு அத்தெ வண்ணான் பாட்டே பாட வைக்கரான்!

ப. இல்லே அத்தான்—எங்க வாத்தியாரு சொன்னாரு—நம்பொ ஏதாவது கஷ்டமான வேலே செய்யரதிண்ணா, பாடிகினே செய்தா கஷ்டம் தெரியாதிண்ணு. அத்தொட்டு—பாவம்! நீங்க கஷ்டப்பட்டு புடவே தோய்க்கரைங்களே—இந்தப் பாட்டே கேட்டுகினே தோய்ச்சைங்கண்ணா அந்த கஷ்டம் தெரியாமே யிருக்கும் இண்ணு இந்த பிளேட் போட்டேன்.

அ. ம. அம்பி, அத்தெ கொண்டாடா இப்படி, எப்படி பாடுது இண்ணு நான் பாக்கணும்.

ப. இதோ. [மறைகிறான்.]

அ. ஏண்டி! பக்கத்து வீட்டிலிருந்து அது எழுத்தாளி பண்ரது போதாதிண்ணு, இங்கேயே கொண்டாந்து என்னே எழுத்தாளி பண்ணச் சொல்லரையோ? அது அந்த

பாட்டே என் எதிர்லே பாடிச்சா! அத்தெ சுக்கல் சுக்கலா ஒடைச்சி போடுவேன்! இப்பவே சொன்னேன்— நீ என்ன கோவிச்சிகிறுலும் கோவிச்சிகோ.

அ. ம. இல்லே இல்லே! அத்தே நானு இங்கே அந்த பாட்டே வாசிக்கச் சொல்லலே—அது என்னமா பாடுது இண்ணு பாத்ததில்லே—அதுக்காக இங்கே கொண்டாரச் சொன்னேன்.

அ. அடியே! இப்பவே நானு சொல்லிவிட்டேன்! நீ என்னே என்ன வேணுமின்னுலும் திட்டு— கேட்டுகரேன்; அந்ததுஷ்டப்பய எதிர்லே மாத்திரம் ஒண்ணும் சொல்லாதே! அவன் எதிர்லே என்னமாறு என்னெ நீ சொன்னு, அத்தெ உடனே போய் ஊர் எல்லாம் மோளம் அடிச்சூடரான்! என்மான மெல்லாம் போவுது! [அழுகிருன்.]

அ. ம. இல்லே இல்லே! நீர் அழாதீர்! [கண்ணை துடைக்கிருள்] அந்த கிராமபோனே இங்கே பாடவே சொல்லலே!— சும்மா பாத்தூட்டு அனுப்பிச் சூடரேன்—உம்—சமயல்பண்ண நேரமாச்சு— நீர் அந்த கத்தரிக்காயே திருத்திவையும் சீக்கிரம்.

அ. ஆ! இந்த மாதிரி நல்லவேலேயா சொல்லு! எத்தனிவேணுமிண்ணுலும் செய்யரேன்!

[அரிவாள்மணையை எடுத்து கத்திரிக்காயைத் திருத்துகிருன்.]

**பட்டாபிராமன்** ஒரு கிராமபோனேக் கொண்டு வருகிருன்.

ப. இந்தா அக்கா—இதுதான் பாட்டு பாடர கிராமபோன்.

அ. ம. இது எப்படி பாடும்?

ப. இதுக்கு சாவி கொடுத்தூட்டா—இது சுத்தும்—இதும் பேர்லே இந்தப் பிளேட்டே போட்டு இந்த ஊசியே நேராக வைச்சா, சுத்தும்போது பாட்டு கேக்கும்—இந்த வண்ணான் பாட்டெ போடட்டுமா?

அ. ம வேணும் வேணும்!—உங்க அத்தானுக்கு கோபம் வருது—இதேது உனக்கு?

ப. இந்த கிராமபோன் எதிராத்து பிள்ளையுது—இந்த பிளேட் மாத்திரம் நேக்கு, போனவாரம் சங்கீதப் பரீட்சையிலே—இந்த கிராமபோன் கம்பெனியார் பிரைஸ் கொடுத்தாக—நானு நண்ணு பாடனே இண்ணு.

அ. ம. என்னு பாட்டு பாடனே ?—பாடு கேட்போம்—இந்த வண்ணுன் பாட்டு வேணும்.

அ. அப்படி—ஏதாவது நல்ல பாட்டா பாடு—நானும் கேட்கிறேன்.

ப. உம் [பாடுகிறான்.]

ராகம்—தோடி—தாளம்—ஆதி.

"கத்திரிக்காய் கூடை கொண்டாடி
ஒண்ணு—ரெண்டு—மூணு—நாலு—அஞ்சி—ஆறு—ஏழு—எட்டு
துண்டாக நறுக்கிப்போட."— (க)

அ. பாத்தையாடி! அந்தப்பய குறும்பே!—இப்படியெல்லாம் அவன் எதிர்லே என்னெ அவமானப்பட வைக்கிறது—உனக்கு நன்னாயிருக்கா! [அழுகிறான்.]

ப. நீங்கள் அழாதைங்க அத்தான்—நானு ஓடிப்பூடரேன். [ஓடிப்போகிறான்.]

அ. ம. ஐயோ! பிராம்மணா! ஓமக்கு இந்த கண்ணீர் எங்கிருந்துதான் வருதோ? நெனைச்சிண்டா தாரை தாரையாய் வருதே! கண்லே மொளகாய் பொடி கிளகாய் பொடி ஏதாவது போட்டுகுரீரா என்னு—வேண்டும்போது?—ஆ! நண்ணு கியாபகம் வந்துது—நேத்து கேட்டீரே—காரக்கொழும்பு வேணுமிண்ணு—

[உள்ளே யிருந்து கொஞ்சம் மிளகாயைக் கொண்டு வந்து]

இந்தாரும்—இத்தெ கொஞ்சம் அறைச்சி கொடும்— [கொடுக்கிறாள்.]

அ. அடி! நான் நீ சொன்னபடியே செய்யரேன்—அந்தப்பய இதெ பாத்தாண்ணு—எழுத்தாளி பண்ணுவான்—நான் இந்த அம்மியே இந்த செவுத்தோரமா போட்டுகினு அறைக்கிறேன். அவன் செவுத்தும் பேர்லே எட்டி பார்த்தாலும் தெரியாது.

அ. ம. சரிதான், அப்படியே செய்யும்.

[உள்ளே போகிறாள்; அஸ்வகர்ணன் மிளகாய் அரைக்கிறான்.]

ப. [சுவற்றின் மீது தலையை நீட்டிப் பார்த்து] எங்கே அத்தானே காணோம்? ஏதோ சத்தம் மாத்திரம் கேக்குது.

[மறைகிறான்; பிறகு புழக்கடைக் கதவை மெல்ல திறந்து பார்த்துவிட்டுப் போய், பிறகு சுவற்றின் மீது தலையை நீட்டிப்பாடுகிறான்.]

"கொப்பியள்ளோ—
மிளகாய் தன்னையே
மெதுவாய் அரைக்கவே
கொப்பியள்ளோ" (கொ)

அம்மி மேல் மிளகாயை
அழகாய் வைத்து
சும்மா அரைக்கா விடில்
கும்மா விழுமே (கொ)

அ. உம்!—அந்தப்பய இத்தையும் எப்படியோ பாத்துட்டான் அவகிட்ட சொல்ரத்துலே பிரயோஜனமில்லே—தம்பி!—அவனோடேயே நேரா பேசிப் பாக்கரேன்— [எழுந்து] அம்பி! நீ நல்லவன் உன்னோடே ஒரு சமாசாரம் பேச வேணும்—இப்படி புழக்கடைப் பக்கமாவா—கதவைத் திறக்கிறேன். [அங்ஙனமே செய்கிறான்.]

**பட்டாபிராமன்** அதன் வழியாக வருகிறான்.

ப. என்ன அத்தான் சமாசாரம்?

அ மெல்ல பேசு!—அவ கேக்கப் போராள்!—ஏண்டா அம்பி? இது ஒனக்கு நியாயமா? உன் அக்கா தான் பெரியவள்—என்னெ இக்கோல மெல்லாம் காட்டராள்! பெண்டாட்டி—யாச்சே அவள் பேச்சுக்கு குறுக்கே சொல்லக்கூடாதின்னு, அவள் சொல்ரபடியெல்லாம் கேக்கரேன்—பொம்மனாட்டி—அவளோடே சண்டை என்னத்துக்கு இண்ணு—நீ என்னெப்போலெ ஆம்பிள்ளையாச்சே? நீ என்னெ இப்படி யெல்லாம் பாட்டு கட்டி எழுத்தாளி பண்ணலாமா?

ப. இல்லே அத்தான் — கோவிச்சிகாதைங்கோ !— நீங்க ஆம்பளே—மொளகா அறைக்கலாமா ?

அ. கூடாது தான் ! இல்லாப்போனு அவ சண்டை போடுராளே —அவளோடு யார் சண்டை போடரது ?

ப. அத்தான் !—உங்களே மொளகாய் அறைக்கச் சொல்லாதிருக்கிறத்துக்கு, ஒரு யுக்தி சொல்ரேன், அதன்படி செய்யுங்க—அப்புறம் அக்கா இந்த வேலே ஒமக்கு வைக்கவே மாட்டா !

அ. அப்படி சொல்லுடா அம்பி !—நீ ஆம்பளே—என் பக்கம் பேச வேண்டாமா ?

ப. இந்த அம்மியெ தூக்கி இந்த கல்லும் பேர்லே போடும்—ஒடஞ்சி பூடும் !—அப்புறம் எப்படி உம்மெ அறைக்கச் சொல்வா அக்கா பார்ப்போம்.

அ. இது நல்ல யுக்தி தான்.

[அப்படியே அம்மியைப்போட அது உடைகிறது.]

அஸ்வகர்ணன் மனைவி விரைந்து வருகிறுள்.

அ. ம. என்ன இது ! அம்மியெ ஒடச்சூட்டீரே !

அ. இல்லேடி—அத்தெ தூக்கி—முன்னே இருந்த இடத்திலே வைக்கப் பாத்தேன் !—கைநழுவி—விழுந்து—

ப. உடைஞ்சி பூட்டுது !

அ. ம. ஐஐயோ !—சுக்கல் சுக்கலா உடஞ்சி பூட்டுதே !—நான் என்ன செய்யப் போரேன் !—அது எம் பொறந்தாத்துலே யிருந்து எனக்கு ஸ்ரீதனம் கொடுத்ததாச்சே !—இனிமேலே மொளகாய் கிளகாய் அறைக்கணும் இன்னு நான் என்ன செய்யப் போரேன் !

ப. அதுக்காக வருத்தப்படாதே அக்கா—நான் ஒரு யுக்தி சொல்ரேன்.

அ. ம. என்ன யுக்தி ?

ப. அத்தான், இங்கே வாங்க—கொஞ்சம் குனியுங்க—

[அப்படியே அவர் செய்ய]

அத்தான் முதுவுலே மொளகாயெ அறைச்சூடலாம் இனி மேலே!

அ. என்ன சொன்னான் பய!

[அவனைப் பிடிக்க ஓட, அவன் தப்பித்துக் கொண்டு முன் கட்டு வழியாக ஓடிப்போய் விடுகிறான்.]

பாத்தையாடி! பாத்தையாடி!—உன்னாலே தான் அந்தப் பய கெட்டுப் போரான்! இப்படி யெல்லாம் அவன் என்னெ எழுத்தாளி பண்ண, அத்தெ நீ கேட்டு கினு இருக்கிறத் தொட்டுதான், அவன் தலே தம்பிடியா போவுது!

[தேம்பி அழ ஆரம்பிக்கிறான்.]

அ. ம. போதும்—நிறுத்துங்க!—இனிமேலே நானு அவனே கண்டிக்கரேன்—நிறுத்தும்!—இல்லாப் போனா என் தம்பியே கூப்பிட்டுக் காண்பிப்பேன்—பொம்மனாட்டி யாட்டம் அழரத்தெ பாக்கச் சொல்லி!

[அஸ்வகர்ணன் அழுகையை நிறுத்துகிறான்.]

அ. இனிமேலே — எனக்கு — இந்தமாதிரியான—வேலெயெல்லாம் இடாதில்லே இன்னு—சத்தியம்—பண்ணிக்கொடு.

அ. ம. அப்படியே ஆவட்டும்—

[இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போது, பட்டாபிராமன் மெல்ல வந்து, இவர்களுக்குத் தெரியாதபடி அங்கிருக்கும் கூடை ஒன்றின் கீழ் ஒளித்துக் கொள்ளுகிறான்.]

இந்தாரும்—கொஞ்சம் என் தலையை வாரி—பின்னல் போட்டும்.

அ. அந்தப் பய—இதைப் பாத்தா—ஒன்னும்—எழுத்தாளி பண்ண மாட்டானே?

அ. ம. ஒன்னும் பண்ணமாட்டான்! ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியே—பொம்மனாட்டிக்கி பின்னல் போட்டாராம்! இதிலென்ன தப்பு?

அ. ஆமாம் [அப்படியே அவளுக்கு தலேவாரி பின்னல் போடுகிறான்.]

ப. [கூடைக்குள் இருந்து சிரிக்கிறான்] ஹா!—ஹா!—ஹா!

அ. அதென்ன சத்தமடி அது?

அ. ம. சத்தமுமில்லே கித்தமுமில்லே — இங்கேயாரு சத்தம் போடரா?

அ. இல்லெயடி எனக்கு சந்தேகமாயிருக்குது—இந்தக் கதவெ நன்ன சாத்திவுட்டு வாரேன— [அப்படியே செய்கிறான்.]

ப. [கூடைக்குள்ளிருந்து நகைக்கிறான்] ஹா!—ஹா!—ஹா!

அ. ஏண்டி! யாரோ சிரிக்கராப்போலெ கேக்கலே?

அ. ம. ஒன்னுமில்லே — பயித்தியம்!—சீக்கிரம் பின்னல் போடுங்க.

அ. இல்லேயடி—அந்தப்பய—பக்கத்தாத்திலே இருக்கரான— எட்டிப் பாக்கரேன்.

[ஓர் உரலை உருட்டிக்கொண்டுவந்து அதன் மீதேறி எட்டிப்பார்த்து]

—அங்கேயும் காணமடி அந்தப் பயலே.

அ. ம. சும்மா வந்து உக்காரும்—நேரமாகுது—சீக்கிரமாகட்டும்.

ப. [கூடைக்குள்ளிருந்து பாடுகிறான்.]

(காமி சத்யபாமா—என்ற மெட்டு)

கண்ணே! ருக்மணியே பின்னலைப்பின்னுரேன்
பின்னுரேன்! பின்னுரேன் பின்னுரேன்!— (க)

அ. ஏண்டி! நான் சொன்ன கேட்டையா? அந்தப்பயதான் எங்கேயோ யிருந்து பாடுரான்.

அ. ம. ஆமாம் அவன் குரல் போலே தான் இருக்குது—எங்கே இருந்து பாடரான்? [இருவருமாகத் தேடிப் பார்க்கிறார்கள்.]

அ. எங்கேயும் காணமே அந்தப்பயலே!

ப. [கூடைக்குள்ளிருந்து பாடுகிறான்]

எண்ணையை நன்றாய்ப் பூசி
வண்ணமாய் வாரிவிட்டு
கண்ணேஉன் பின்னலை பின்னுரேன் பின்னுரேன்
—பின்னுரேன் (க)

அ. [மெல்ல] அடி! அடி! அந்தப்பய—இந்தக் கூடைக்குள்ளே இருக்கிறான்!—நீ அந்தப் பக்கம் கையெ உடு—நானு இங்

தப் பக்கம் கைமே உடறேன்— அப்படியே —புடிச்சிகலாம் அவனே! [கூடையை ஒரு கையால்இருவருமாகத் தூக்கி மற்ளுெருகையால் அவனைப் பிடிக்கப்போய், ஒரு வர் கையை மற்ளுெருவர் கெட்டியாய்ப் பிடித்துக் கொள்ளுகிருர்கள். பட்டாபிராமன் தப்பித்துக் நொண்டு ஓடப்பார்க்கிருன்; கதவு பூட்டப் பட்டிருப்பதால் அகப்பட்டுக் கொள்ளுகிருன்.]

ப. அக்கா! அக்கா! உட்டுடக்கா! உட்டுடக்கா என்னெ!

அ. ம. உட்டுடரேன்!—முன்னே—உங்க அத்தாம் பேர்லே பாட்டு கட்டி பாடரதில்லே இன்னு சொல்லு.

அ. உம்—சத்தியம் பண்ணச் சொல்லு.

அ. ம. ஆமாம்—சத்தியம் பண்ணு.

ப. இனிமேலே—அத்தாம் பேர்லே—பாட்டு கட்டி பாடலே சத்தியமா!—உட்டுடக்கா!

அ. ம. உட்டுடரேன்—நேத்து - ஒரு பிரியணே வாங்கிவரச் சோன் னேனே என் இது வரைக்கும் வாங்கியார்லே?

ப. தப்புதான்—இப்போ போய் வாங்கி வந்தூடரேன்.
[அஸ்வகர்ணன் மனைவி அவனை விட்டு விடுகிருள்.]

அ. ம. சீக்கிரம் வாங்கி வாடா அம்பி.

ப. இதோ ஓட்டமா ஓடிப்போயி வாங்கி வர்ரேன்—ஆனல் ஒரு கேள்வி—உனக்கு என்னுத்துக்கு அக்கா பிரிமணே?

அ. ம. அதெல்லாம் உனக்கு என்னுத்துக்கு? வாங்கிவாடா சீக்கிரம்.

ப. [போகும் போது] இல்லே—இதாம் பிரிமணே ஒன்னு இங்கு இருக்குதே ஆத்துலே! [அஸ்வகர்ணனை காட்டி] வேறே துட்டு போட்டு வாங்குவானேன்! இன்னு கேட்டேன்!
[ஓடிப்போகிருன்.]

பிரஹசனம் முடிகிறது.

—oo⁂oo—

# சபாபதி முதலியார்

## முதற் கதை

சபாபதி முதலியார் மைத்துனர் கிருஷ்ணசாமிமுதலியார் பி.ஏ. பரிட்சையெல்லாம் கொடுத்து பிறகு ஓர் ஊரில் டெபுடி கலெக்டர் உத்தியோகத்திலிருந்தார். ஒரு சமயம் அவர் பொன்னேரியில் முகாம் போட்டார். அச்சமயம் அங்கு நடக்கும் சந்திப்பு உற்சவத்தைப்பார்க்க தன் மைத்துனர் சபாபதி முதலியாரை அழைக்க அவர் காம்பிற்கு வந்து சேர்ந்தார். பிறகு இருவரும் ஏதோ வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில், கிருஷ்ணசாமி முதலியார், தன் ஆர்டர்லிகளில் ஒருவனுகிய ஷெரீப் என்னும் சாயபுவைப் பற்றி புகழ்ந்து பேசி "இவனைப் போல் துரிதமாக வேலை செய்யும் ஆளை நான் இது வரையில் கண்டதில்லை இனி காணவும் போகிறதில்லையென்று நினைக்கிறேன். இதற்கு ஒரு உதாரணம் உங்களுக்குக் காட்டுகிறேன் பாருங்கள்" என்று சொல்லி, ஷெரீப்பை அழைத்து "சாஹெப், இந்தா ஒரு அணு; இதை எடுத்துக்கொண்டு சிவன் கோயிலண்டை போ, அங்கே ஒரு பம்பரக்கடை ஒருவன் வைத்திருக்கிருன், அவனிடம் முக்காலணுவுக்கு ஒரு பெரிய பரம்பரம் வாங்கி, அதை விஷ்ணு கோயில் பக்கத்திலிருக்கும் கருமானிடம் கொண்டு போய், காலணு கொடுத்து ஒரு சரியான ஊக்கு போட்டுக் கொண்டு வா சீக்கிரம்" என்று சொல்லி அனுப்பிவிட்டு, தன் கைக் கடியாரத்தை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு, "ஐந்து நிமிஷம் ஆச்சுது, இப்பொழுது சாயபு சிவன் கோயிலுக்குப் போயிருப்பான்,—ஆறு நிமிஷம் ஆயது — இப்பொழுது பொம்பரத்தை கருமானிடம் கொடுத்திருப்பான்—நான்கு நிமிஷம் ஆச்சுது, இப்பொழுது அப் பம்பரத்தை கொண்டு வந்திருப்பான்— சாஹெப்!"--என்று கூப்பிட, உடனே அந்த சாயபு ஊக்கு போட்ட பம்பரத்தை கிருஷ்ணசாமி முதலியார் மேஜையின் மீது வைத்து சலாம் செய்தான்! அதன் பேரில் "பார்த்தீர்களா அத்தான்" என்று அவனைப் புகழ்ந்தார் மிகவும்.

அதன் பேரில் சபாபதி முதலியார், "இதென்ன விசேஷம் அப்பன்!—நம்முடைய சபாபதி இதைவிட விரைவாக இந்த வேலையைச் செய்து முடிப்பானே," என்று சொல்லி, தன் வேலையாளாகிய சபாபதியை அழைத்து அவனிடம் ஒரு அணாவைக் கொடுத்து, கிருஷ்ணசாமி முதலியார் இட்ட வேலைப்படியே அவனுக்கும் வேலையிட்டு அனுப்பினார். சபாபதி கூடாரத்தை விட்டு வெளியே போனவுடன், தன் கை கடியாரத்தை கையில் வைத்துக்கொண்டு, கிருஷ்ணசாமி முதலியாரைப் போலவே தானும் சொல்ல ஆரம்பித்தார்—"நான்கு நிமிஷமாயது—சபாபதி பொம்பரக் கடைக்குப் போயிருப்பான்,—இரண்டு நிமிஷம் ஆயது—சபாபதி பொம்பரத்தை வாங்கிக்கொண்டு விஷ்ணு கோயிலுக்குப் போயிருப்பான்—மூன்று நிமிஷமாச்சு சபாபதி திரும்பி வந்திருப்பான்—சபாபதி!" என்று கூப்பிட்டார். உடனே சபாபதி கூடாரத்திற்குள் பிரவேசித்தான்! கிருஷ்ணசாமி முதலியாருக்கு மிகவும் ஆச்சரியமாகப் போய் விட்டது; தன் ஆர்டர்லி 15 நிமிஷத்தில் செய்தவேலையை சபாபதி எப்படி 9 நிமிஷத்திற்குள் செய்து முடித்திருக்கக் கூடும் என்று ஆச்சரியப் பட்டவராய் "சபாபதி, இவ்வளவு சீக்கிரத்தில் இந்த வேலையை எப்படி முடித்தாய்?" என்று மெச்சி "எங்கே நீ வாங்கி வந்த பொம்பரத்தைக் காட்டு" என்று கேட்க சபாபதி, "பொம்பரம் இன்னும் வாங்கவில்லைங்க, இனி மேலேதான் போய்வாங்கி வரணும்" என்று பதில் சொன்னான். அதன் பேரில் கிருஷ்ணசாமி முதலியார் "ஆனால்—இது வரையில் என்ன செய்துகொண்டிருந்தாய்?" என்று கேட்க, சபாபதி "என் செருப்பைத் தேடிக்கொண்டிருந்தேன்; கூடாரத்திற்கு வெளியே வைச்சேன், அதைக் காணோம்" என்று பதில் சொன்னான். அதன் பேரில் கிருஷ்ணசாமி முதலியார், இவன் இன்னும் புறப்படவே யில்லை என்பதை அறிந்தவராய் அடங்காச் சிரிப்பு சிரித்தார். அதன் மீது சபாபதி முதலியாருக்கு கொஞ்சம் கோபம் பிறந்து "அடே! கழுதை! பொம்பரம் நீ வாங்கினது போதும், அந்த அணாவைக் கொடுத்துவிடு" என்று கேட்க, சபாபதி "இல்லையப்பா நீ கோபிச்சுக்காதே என் செருப்பெ தேடின போது அந்த அணா எங்கேயோ விழுந்து போய்விட்டது, நான் போய்த் தேடி எடுத்துக் கொண்டு வருகிறேன்." என்று வெளி

யில் போனான். அச்சமயம் சபாபதி முதலியார், கிருஷ்ணசாமி முதலியார் இருவர்களில் யாருடைய முகம் நகைத்தது, யாருடைய முகம் மூன்றும் பேஸ்து வைத்தது போலிருந்தது என்பதை நான் குறிக்க வேண்டியதில்லை.

---

## இரண்டாவது கதை.

ஒரு முறை வேலையாள் சபாபதிக்கு, அவனது தூர பந்து ஒருவர் மிகவும் உடம்பு அசௌக்கியமா யிருப்பதாகக் கடிதம் வந்தது. அதைக் கொண்டுபோய் தன் எஜமானாகிய சபாபதி முதலியாரிடம் கொடுத்து, படிக்கச் சொல்லி, சமாசாரம்தெரிந்து கொண்டான பிறகு, சபாபதி, "இந்த மாதிரி காகிதம் வந்திருக்கிறதே இதற்கு நான் என்ன செய்கிறதப்பா?" என்று சபாபதி முதலியாரைக் கேட்க, அவர், "நீ உடனே போய் அவரை விசாரித்து விட்டு வா" என்று விடைகொடுத்தார். அதன் பேரில் சபாபதி, "விசாரிக்கிறதென்றால்--நான் என்ன செய்வதப்பா?" என்று வினவ, சபாபதி முதலியார் அவனுக்கு மூன்று சமாசாரங்கள் சொல்லி யனுப்பினார். "முதலில் நோயாளியைப் பார்த்தவுடன், யார் வைத்தியம் பார்க்கிறதென்று கேள்—அவர் வயித்தியர் பெயரைச் சொல்லுவார், அதற்கு ஆமாம் அவர் நல்ல வயித்தியர் அவரை விடாதீர்கள் என்று பதில் சொல், இரண்டாவது, என்ன மருந்து கொடுக்கிறார்? என்று கேள், அவர் சாப்பிடுகிற மருந்தைச் சொல்லு வார். அப்பொழுது 'அது மிகவும் நல்ல மருந்து, அதையே சாப் பிட்டுக் கொண்டு வாருங்கள் என்று சொல், கடைசியாக எப் பொழுது வியாதி சௌக்கியமாகு மென்று வயித்தியர் சொல்லுகிறார் என்று கேள், அதற்கு அவர் ஏதாவது ஒரு தவணை சொல்வார், அதன் மீது சீக்கிரமாக அப்படியே சுவஸ்தப் படுத்திக் கொள்ளுங் கள் என்று பதில் உரைத்துவிட்டு, திரும்பி வந்துவிடு" என்றார்.

சபாபதி இக்கேள்விகளையும் பதில்களையும் ஒரு காகிதத்தில் எழுதி வாங்கிக் கொண்டு, குருட்டுப்பாடம் செய்துவிட்டு, தன் நோயாளி பந்துவைப் பார்க்கப் போனான். போனவிடம் அந்நோயாளி மிகவும் நோயா யிருப்பதைக் கண்டு, அவர் பக்கலில் உட்கார்ந்து,

முதல் கேள்வி, "யார் வயித்தியம் பார்க்கிறது?" என்று கேட்டான் அதற்கு நோயாளி, "எல்லா வயித்தியரையும் பார்த்தாச்சுது, இப்பொழுது யமன் தான் வயித்தியன்!" என்றார். அதற்கு சபாபதி தான் குருட்டு பாடம் பண்ணி வந்த பிரகாரம் "ஆமாம் அவர் நல்ல வயித்தியர் அவரை விடாதீர்கள்!" என்று விடைபகர்ந்தான். பிறகு "அவர் என்ன மருந்து கொடுக்கிறார்? என்று கேட்க, நோயாளி "என்ன மருந்து கொடுக்கிறது? மண்ணாங் கட்டிதான்!" என்றார். சபாபதி தான் கற்றுக் கொண்டு வந்த வண்ணம் இதற்கு "அது மிகவும் நல்ல மருந்து, அதையே சாப்பிட்டுக்கொண்டு வாருங்கள்!" என்று கூறி விட்டு, மூன்றாவது கேள்வி கேட்டான். "வியாதி எப்பொழுது சுவஸ்தமாகு மென்று வயித்தியர் சொல்லுகிறார்?" என்று வினவ, நோயாளி "இந்த உடம்பைக் கொளுத்தும் பொழுது தான் சுவஸ்தமாகு" மென்று வெறுத்துக் கொண்டு சொல்ல சபாபதி, தான் பாடம் படித்த வண்ணம் "சீக்கிரமாக அப்படியே சுவஸ்தப் படுத்திக் கொள்ளுங்கள்!" என்று பதில் சொல்ல, நோயாளிக்குக் கோபம் பிறந்து உரத்த சப்தமாய் சபாபதியைத் திட்டி வெளியே போகச் சொன்னார். நோயாளிக்கு உடம்பெல்லாம் வியர்த்தது! அது காரணம் பற்றியோ, என்னவோ, தெய்வா தீனமாய் நோயாளிக்கு இருந்த நோய், அந்தட் சணம் முதல் குறைய ஆரம்பித்து, நாளடைவில் தெய்வா தீனமாக சுவஸ்த மடைந்தார். பிறகு சபாபதியை ஒரு நாள் அவர் சந்தித்து "என்னடா அப்பா எனக்கு இப்படி பதில் சொன்னாய்?" என்று கேட்க சபாபதி எனக் கொன்றும் தெரியாது எங்க எஜமான் சபாபதி முதலியார் தான் அப்படி சொல்லச் சொன்னார் என்று உரைத்தான். அதன் பேரில் அவர் குலுங்கச் சிரித்துவிட்டு, சபாபதி முதலியாரிடம் போய் நடந்த சமாசாரத்தைச் சொல்லி "முதலியார் அவர்கள், உங்களால் நான் தீராததென்று நான் நினைத்துக் கொண்டிருந்த நோய் தீர்ந்தது!" என்று கூறி சந்தோஷப்பட்டார்.

# போக்கிரி அண்ணுசாமி முதலியார் கதை

அநேக வருஷங்களுக்கு முன் சென்னையில் அண்ணுசாமி முதலியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிறு வயது முதல் ஏதாவது தப்புதண்டா செய்து கொண்டிருந்த படியால் அவருக்கு போக்கிரி அண்ணுசாமி முதலியார் என்று பெயர் வந்தது.

ஒரு முறை அவரது பக்கத்து வீட்டுக்காரனுகிய ஒரு சிறு பிள்ளையாண்டானை ஏமாற்றி, 50 ரூபாய் கொடுத்து 500 ரூபாய்க்கு ஆண்டிமாண்டு புராமிசெரி நோட் வாங்கிக்கொண்டு, ஒரு மாறுபாடி சாவுகார், பிறகு அந்த பிள்ளையாண்டான் மீது மொத்த தொகைக்கு டிக்ரி வாங்கி, வசூல் செய்து விட்டான். இவ்விஷயத்தை அப் பிள்ளையின் தகப்பனுர் நமது அண்ணுசாமி முதலியாரிடம் கூறி முறையிட, நீங்கள் கொஞ்சம் பொறுங்கள், அதற்குத் தக்க ஏற்பாடு செய்கிறேன் என்று கூறிவிட்டு, கொஞ்ச நாட்கள் பொறுத்து அந்த சாவுகாரிடம் போய் மெல்ல பரிசயம் செய்துகொண்டு, முதலில் கொஞ்ச தொகை கடன் வாங்கி தவணைப் பிரகாரம் அத்தொகையை செலுத்தி விட்டார். இப்படி கொஞ்சம் கொஞ்சமாக, அதிக தொகைகளும் வாங்கி தவணைப் பிரகாரம் அவைகளைச் செலுத்தி, சாவுகார் தன்னிடம் மிகவும் யோக்கியன் என்று நம்பும்படி செய்தார். கடைசியாக ஒரு நாள் சாவுகாரிடம் போய் தனக்கு ஆயிரம் ரூபாய் அவசியமாக வேண்டியிருப்பதாய்த் தெரிவித்தார். சாவுகார் அத்தொகையை எப்பொழுது கொடுப்பீர்கள் என்று கேட்டதற்கு "அதெல்லாம் ஒன்றும் பயப்படாதே சாவுகார்! இன்றைக்கென்ன? டிசம்பர் மாதம் முதல் தேதி யல்லவா? சரியாக மூன்று மாதத்தில் கொடுத்து விடுகிறேன்" என்று பதில் உரைத்து, சாவுகாருக்கு வழக்கப்படி, இரண்டாயிரம் ரூபாய்க்கு அண்டிமாண்டு பத்திரம் எழுதிக் கொடுத்து ஆயிரம் ரூபாய் ரொக்கமாக வாங்கிக் கொண்டு போய் விட்டார். உடனே பக்கத்து வீட்டுப் பிள்ளையாண்டான் தகப்பனிடம் போய், அவர் பிள்ளை கடன் வாங்கின

தினுல் எவ்வளவு நஷ்ட முண்டாச்சுது என்று கணக்குப் பார்த்து அந்த ஆயிரம் ரூபாயில் அந்த நஷ்டத்தை யெல்லாம் கணக்காசாரம் கொடுத்துவிட்டு, மிகுதி பணத்தை தான் சாவுகாரிடம் லேவாதேவி செய்ததில் நேரிட்ட நஷ்டத்திற்காக எடுத்துக்கொண்டார். இரண்டு மாதமானவுடன் சாவுகார் பணத்தைத் திருப்பிக் கொடுக்கும்படி கேட்க, அண்ணுசாமி முதலியார் "சாவுகார், கொஞ்சம் பொறுத்துக்கொள், இப்பொழுது கொடுப்பதற்குக் கொஞ்சம் கஷ்டமாயிருக்கிறது, வருகிற மாதம் முதல் தேதி கட்டாயமாய் நான் கொடுத்து விடுகிறேன், ஒன்றும் பயப்படாதே" என்று தைரியம் சொன்னுர். சாவுகாரும் அதை நம்பிப் போய் விட்டான். பிறகு ஏப்ரல் மாதம் முதல் தேதி வந்ததும், சாவுகார் அண்ணுசாமி முதலியார் குடியிருந்த வீட்டில் போய் விசாரிக்க, அண்ணுசாமி முதலியார் கோயமுத்தூருக்குப் போயிருப்பதாக அறிந்து, அவரது மேல் விலாசம் விசாரித்துக் கொண்டு, உடனே அசல் வட்டியுடன் கடன் வாங்கிய தொகையை மூன்று தினங்களுக்குள் செலுத்தா விட்டால், கோர்ட்டில் தாவா செய்வதாக ஒரு ரிஜிஸ்டர் நோடீஸ் அனுப்பினுன். அதற்கு பதில் உடனே கோயமுத்தூரிலிருந்து அண்ணுசாமி முதலியார் அடியிற் கண்டவாறு அனுப்பினுர் "நான் எப்பொழுதும் வாக்குதவற மாட்டேன்; உனக்குச் சொன்னபடி ஏப்ரல் மாதம் முதல் தேதி ஐகோர்ட்டில் "கொடுத்து விட்டேன்" என்று, பதில் அனுப்பினுர். சாவுகார் நம்முடைய கடனை ஹைகோர்ட்டில் கொடுத்து விடுவதாவது என்று ஆச்சரியப்பட்டவனுய், ஹைகோர்ட்டில் போய் விசாரிக்க, அங்கு ஏப்ரல் மாதம் முதல் தேதி அண்ணுசாமி முதலியார் இன்சால்வென்டு பிடிஷன் "கொடுத்து விட்டதாக"த் தெரிய வந்தது! பிறகு கொஞ்சம் நாள் பொறுத்து அண்ணுசாமி முதலியாரை சாவுகார் சந்தித்து இப்படி தன்னை மோசம் செய்யலாமா என்று கேட்டதற்கு "நான் உனக்கு ஒன்றும் நஷ்டம் கொடுக்கவில்லை; நீ மோச அடியாக என் வீட்டுப் பக்கத்துப் பிள்ளையாண்டானிடம் மோசம் செய்து பெற்ற ரூபாயை, அவனிடம் சேர்ப்பித்து விட்டேன்" கணக்குப்பார்; நீ அவனிடம் ரொக்கமாய்க் கொடுத்த ரூபாய்க்கும் எனக்கு வாஸ்தவத்தில் கொடுத்த ரூபாய்க்கும், சரியான வட்டி போட்டுப்பார், இதற்கும் அதற்கும் சரியாய்ப் போய் விட்டது", என்று பதில் உரைத்தார்.

---

